# லூககா என்பவர்

எழுதின

# சுவிசேஷம்.

---

## LUKE'S GOSPEL.

---

PUBLISHED BY THE JAFFNA AUXILIARY BIBLE SOCIETY.

---

American Mission Press, Jaffna.
1845.

# லூக்காவென்பவர் எழுதின

# சுவிசேஷம்.

---

க. அதிகாரம்.

1 மிகுந்த கனம்பொருந்திய தேயோப்பிலுவே,
எங்களுக்குள்ளே நிறைவேறின சங்கதிகளை ஆதிமு
தற் கண்ணாலே (கண்டு சுவிசேஷ) வசனத்தைப்
போதித்திருக்கிறவர்கள் எங்களுக்கு ஒப்புக்கொடு
த்ததின்படியே,
2 அவைகளைக்குறித்துச் சரித்திரத்தை எழுதும்ப
டிக்கு அநேகர் துணிந்தார்கள்.
3 ஆகையால் ஆதிமுதல எல்லாவற்றையும் நன்றாய்
ஆராய்ந்து பார்த்த நானும் உமக்கு உபதேசிக்கப்
பட்ட பொருள்களின் நிச்சயத்தை நீர் அறியும்படி
க்கு,
4 அவைகளை ஒழுங்காய் உமக்கெழுத வேண்டுமெ
ன்று எனக்கு நன்றாய்த் தோன்றிற்று. (அவையா
வன,)
5 யூதேயாதேசத்தின் இராசாவாகிய ஏரோதுடையி
ன் நாட்களிலே அபியா என்னும் ஆசாரிய வகுப்பி
ற் சகரியாவென்னப்பட்ட ஆசாரியன் இருந்தான்.
ஆரோனின் குடும்பத்திற் பிறந்த எலிசபேத்தென்
னப்பட்டவள் அவனுக்கு மனைவியாயிருந்தாள்.
6 அவ்விருவரும் பராபரனுக்கு முன்பாக நீதியுள்
ளவர்களாய்க் கர்த்தர் இட்ட சகல கற்பனைகளின்ப
டியேயும் நியாயங்களின்படியேயுங் குற்றமில்லாம
ல் நடந்துவந்தார்கள்.

எலிசபேத்து மலடியாயிருந்ததுமல்லாமல் அவ் 7
விருவரும் வயதுசென்றவர்களானபடியினாலே அவ
ர்களுக்குப் பிள்ளையில்லை.
அப்படியிருக்குங் காலத்தில் அவன் தன் ஆசாரி 8
யவகுப்பின் முறைமைக்குத்தக்கதாகப் பராபரனு
க்கு முன்பாக ஆசாரிய ஊழியஞ் செய்து வருகிற
பொழுது,
ஆசாரியருடைய வழக்கத்தின்படி அவன் தூபங் 9
கொடுக்கிறதற்குச் சீட்டைப் பெற்றுத் தேவாலய
த்திற் பிரவேசித்தான்.
தூபங் கொடுக்கிற வேளையிலே கூட்டமான சன 10
ங்கள் எல்லாரும் புறம்பே செபம்பண்ணிக் கொ
ண்டிருந்தார்கள்.
அப்பொழுது பராபரனுடைய தூதன் ஒருவன் 11
தூபபீடத்தின் வலது பக்கத்திலே நின்று அவனுக்
குக் காணப்பட்டான்.
சகரியா அவனைக் கண்டு கலங்கிப் பயம் அடைந் 12
தான்.
தூதன் அவனை நோக்கிச் சகரியாவே, நீ பயப்ப 13
ட வேண்டாம். உன் விண்ணப்பங் கேட்கப்பட்
டது. உன் மனைவியாகிய எலிசபேத்து ஒரு குமா
ரனைப் பெறுவாள். அவனுக்கு யோவானென்று
பேரிடுவாயாக.
அவனால் உனக்குச் சந்தோஷமுங் களிப்பும் உ 14
ண்டாகும் அவனுடைய பிறப்பைக் குறித்து அநே
கர் சந்தோஷிப்படுவார்கள்.
என்னத்தினாலெனில் அவன் பராபரனுக்கு மு 15
ன்பாகப் பெரியவனாயத்திராட்ச இரசத்தையும் ம
துபானத்தையுங் குடியாமல் தன் தாயின் வயிற்றி
லே பரிசுத்த ஆவியினாலே நிரப்பப்பட்டிருப்பான்.
அல்லாமலும் அவன் இஸ்ரவேல் சந்ததியாரில் 16

அநேகரை அவர்களுடைய தேவனாகிய பராபரனி
டத்திற்குத் திருப்புவான்.
17 பிதாக்களுடைய இருதயங்களைப் பிள்ளைகளிடத்தி
ற்குங் கீழ்ப்படியாதவர்களை நீதிமான்களுடைய பு
த்திக்குந் திருப்பிச் செம்மையான சனங்களைப் ப
ராபரனுக்காக எத்தனம்பண்ணும்படிக்கு அவன்
எலியாவின் ஆவியையும் பலத்தையுமுடையவனாய்
அவருக்கு முன்னே நடப்பானென்றான்.
18 அப்பொழுது சகரியா தேவதூதனை நோக்கி நா
ன் அதை எதினாலே அறிவேன்? நான் கிழவனாயிரு
க்கிறேன். என் மனைவியும் வயதுசென்றவளாயிரு
க்கிறாளே என்றான்.
19 அவனுக்குத் தூதன் மாறுத்தரமாகச் சொன்ன
னது, நான் தேவனுடைய சன்னிதானத்திலே நிற்
கின்ற காபிரியேலென்பவன் உன்னுடனே பேசி இ
வைகளை உனக்குச் சுவிசேஷமாக அறிவிக்கும்படி
க்கு அனுப்பப்பட்டு வந்தேன்.
20 என் வார்த்தைகள் தகுதியானகாலத்திலே நிறை
வேறும். அவைகளை நீ விசுவாசியாதபடியினாலே
இந்தக் காரியங்கள் சம்பவிக்கும் நாள்வரைக்கும் நீ
பேசத்திராணியில்லாமல் ஊமையனாயிருப்பாயெ
ன்றான்.
21 சகரியாவைக் காணக் காத்திருந்த சனங்கள் அவ
ன் தேவாலயத்திலே தாமதித்ததினாலே ஆச்சரியப்
பட்டார்கள்.
22 அவன் வெளியே வந்தபொழுது அவர்களோ
டே பேசத் திராணியில்லாமல் இருந்தான். அதி
னாலே தேவாலயத்தில் ஒரு தரிசனையைக் கண்டிரு
ப்பானென்று அறிந்தார்கள். அவனும் அவர்களு
க்குச் சயிக்கைகாட்டி ஊமையனாக இருந்தான்.
23 பின்பு அவன் தன் ஊழியத்தின் நாட்கள் நிறை

கருப்பத்தின் கனியும் ஆசீர் வதிக்கப்பட்டது.

என் ஆண்டவருடைய தாயார் என்னிடத்திற்கு 43
வருகிறது எனக்கு எதினாலே கிடைத்தது.

நீ வாழ்த்துதல் சொல்லிய சத்தம் என் காதுகளி 44
ல் விழுந்தவுடனே என் வயிற்றிற் பிள்ளை களிப்பா
ய்த் துள்ளிற்று.

விசுவாசித்தவளுக்குப் பராபரனாலே சொல்லப் 45
பட்டவைகள் நிறைவேறுவதால் அவள் பாக்கியமு
ள்ளவளே என்றாள்.

அப்பொழுது மரியாள் சொன்னதாவது, 46

என் ஆத்துமா பராபரனைப் புகழுகின்றது. எ 47
ன் ஆவி இரட்சகராகிய தேவனிற் களிகூருகின்ற
து.

என்னத்தினாலெனில் அவர் தமது அடிமையின் 48
தாழ்மையை நோக்கிப் பார்த்தார். வல்லமையு
டையவர் எனக்குப் பெரிய காரியங்களைச் செய்த
படியினாலே,

இது முதல் வமிசத்தார் எல்லாரும் என்னைப் பா 49
க்கியவதி என்பார்கள். அவருடைய நாமம் பரிசுத்
தமுள்ளது.

அவருடைய இரக்கந் தலைமுறை தலைமுறையா 50
க அவருக்குப் பயப்படுகிறவர்களிடத்தில் உண்டா
யிருக்கும்.

அவர் தமது கையினாலே பலத்த காரியங்களைச் 51
செய்தார். தங்கள் இருதயத்தின் சிந்தனையில் இ
றுமாப்பாய் இருக்கிறவர்களை அவர்சிதறப்பண்ணி,

பலவான்களைப் பத்திராசனங்களிலிருந்து தள்ளி 52
த் தாழ்மையுள்ளவர்களை உயர்த்தி,

பசியுள்ளவர்களை நன்மைகளினாலே நிரப்பிச் ச 53
ம்பூரணம் உள்ளவர்களை வெறுமையாய் அனுப்பி
னார்.

54 அவர் நம்முடைய பிதாக்களோடே சொன்னப
டியே ஆபிரகாமுக்கும் அவனுடைய சந்ததிக்கும்
என்றென்றைக்கும் இரக்கஞ் செய்ய நினைத்து,
55 தம்முடைய தாசராகிய இஸ்ரவேலரை ஆதரித்
தார் என்றாள்.
56 பின்பு மரியாள் ஏறக்குறைய மூன்று மாதம் அ
வளுடனே இருந்து தன் வீட்டுக்குத் திரும்பினாள்.
57 எலிசபேத்துக்குப் பெறுகாலம் உண்டானபொ
ழுது அவள் ஒரு குமாரனைப்பெற்றாள்.
58 பராபரன் தமது இரக்கத்தை அவளிடத்திற்
பெரிதாக்கினாரென்று அவளுடைய அயலகத்தாரு
ம் பந்து சனங்களுங் கேள்விப்பட்டு அவளுடனே
கூடச் சந்தோஷப் பட்டார்கள்.
59 பின்பு எட்டாம் நாளிலே அவர்கள் பிள்ளைக்கு
விருத்தசேதனம் பண்ணும்படிக்கு வந்து அதின் த
கப்பனுடைய நாமத்தின்படி அதற்குச் சகரியா
வென்று பேரிட்டார்கள்.
60 அப்பொழுது அதின் தாய் சொன்னது, அப்ப
டியல்ல அதற்கு யோவானென்று பேரிடவேண்டு
மென்றாள்.
61 அவர்கள் அவளை நோக்கி உன் உறவிலே இந்த
ப்பேராக அழைக்கப்பட்டவர்கள் ஒருவருமில்லை
யே என்று சொல்லி,
62 அதினுடைய தகப்பனை நோக்கி, இதற்கு என்
ன பேரிட மனதாயிருக்கிறீரென்று சயிக்கையினா
லே கேட்டார்கள்.
63 அவன் எழுதுகிறதற்குப் பலகையைக் கேட்டு
வாங்கி இதின்பேர் யோவானென்று எழுதினான். எ
ல்லாரும் ஆச்சரியப்பட்டார்கள்.
64 அல்லாமலுஞ் அந்நிமிஷத்திலே அவனுடைய
வாயும் நாவுந் திறக்கப்பட அவன் பராபரனைத்

தோத்திரஞ் செய்து பேசினான்.
(அதினாலே) அவர்களைச் சுற்றி வாசமாயிருந்த எ 65
ல்லாருக்கும் பயம் வந்தது. அன்றியும் யூதேயா
வின் மலைத்தேசம் எங்கும் அந்தச் சங்கதிகள் எல்
லாஞ் சொல்லிக்கொள்ளப்பட்டன.
(அவைகளைக்) கேள்விப்பட்டவர்கள் எல்லாரும் 66
(அவைகளைத்) தங்கள் மனதிலே வைத்துக்கொண்
டு அந்தப் பிள்ளை எப்படிப்பட்டதாயிருக்குமோ
என்றார்கள். கர்த்தருடைய கை அந்தப்பிள்ளையி
னிடத்தில் இருந்தது.
அன்றியும் அவனுடைய தகப்பனாகிய சகரியா 67
பரிசுத்த ஆவியினாலே நிரப்பப்பட்டுத் தீர்க்கதரிச
னமாய்ப் பகர்ந்ததாவது,
நாம் நம்முடைய சத்துருக்களின் கைகளுக்குத் 68
தப்புவிக்கப் பட்டவர்களாக,
நம்முடைய வாழ்நாள் எல்லாம் பயமில்லாமல்த் 69
தேவபத்தியாயும் நீதியாயுந் தமக்கு முன்பாக ஊ
ழியஞ் செய்வதற்கு அனுக்கிரகஞ் செய்யும்பொ
ருட்டாய்,
தாம் நம்முடைய பிதாவாகிய ஆபிரகாமுக்கு இ 70
ட்ட ஆணையாகிய தமது பரிசுத்த உடம்படிக்கை
யை நினைத்து,
நம்முடைய பிதாக்கள் மேல் இரக்கமாகி, 71
தாம் உலகத்தின் தோற்றம் முதற்கொண்டிருந் 72
த தமது பரிசுத்ததீர்க்கதரிசிகளால் அருளிச்செய்த
படியே,
நம்முடைய சத்துருக்களினின்றும் நம்மைப் ப 73
கைக்கிற யாவருடைய கைகளினின்றும்,
நம்மை இரட்சிக்கிற பலத்த இரட்சகரைத் த 74
மது தாசனாகிய தாவீதின் குடும்பத்திலே தோன்ற
ப் பண்ணி,

75 (இவ்விதமாய்) தம்முடைய சனங்களைச் சந்தித்து மீட்டுக்கொண்ட இஸ்ரவேலருடைய தேவனாகிய பராபரனுக்குத் தோத்திரமுண்டாவதாக.
76 பாலகனே நீ மரண நிழலாகிய இருளிலே அகப்பட்டிருக்கிறவர்களுக்கு ஒளி உண்டுபண்ணும்படியாயும் நம்முடைய கால்களைச் சமாதானமுள்ள மார்க்கத்திலே நடத்தும்படியாயும்,
77 உன்னதத்தில் இருந்து சூரிய உதயம் நமக்குத் தோன்றப் பண்ணின நமது தேவனுடைய மிகுந்த இரக்கங்களினாலே,
78 அவருடைய சனங்களுக்குப் பாவ மன்னிப்பாகிய இரட்சண்ணியத்தைத் தெரியப் படுத்தி,
79 இவ்விதமாய் அவருக்காக மார்க்கத்தைச் செம்மையாக்கும் பொருட்டாக அவருக்கு முன்னே நடப்பாய். ஆகையால் நீ எல்லாரிலும் மேலானவருடைய தீர்க்கதரிசியென்னப்படுவாய் என்றான்.
80 பின்பு அந்தப் பிள்ளை வளர்ந்து ஆவியிலே பலங்கொண்டு இஸ்ரவேலருக்குத் தன்னைக் காண்பிக்கும் நாள்வரைக்கும் வனாந்தரங்களில் இருந்தான்.

---

## உ. அதிகாரம்.

1 அந்நாட்களிற் குடிகள் எல்லாருக்குமுண்டாகிய பேர் முதலானவைகளையும் எழுத வேண்டுமென்று அகுஸ்து இராயனுடைய கட்டளை வந்தது.
2 சீரியா நாட்டிலே கிரேனியென்பவன் துரையானபொழுது முதலாவது இந்தக் குடிமதிப்பு உண்டாயிற்று.
3 அந்தப்படி எல்லாரும் எழுதப்படும்படிக்குத் தங்கள் தங்கள் ஊர்களுக்குப் போனார்கள்.
4 அப்பொழுது யோசேப்புத் தாவீதின் குடும்பத்தானுமாய் வமிசத்தானுமாய் இருந்தபடியினாலே,

தனக்கு நியமிக்கப்பட்ட கருப்பவதியாகிய மனை
வி மரியாளுடனே கூட எழுதப்படும்படிக்குக் கலி
லேயா நாட்டிலுள்ள நாசரேத்தூரை விட்டு,
யூதேயா நாட்டிலுள்ள பெத்லெகேமென்னப் 5
பட்ட தாவீதின் ஊருக்குப் போனான்.
அவ்விடத்தில் அவர்கள் இருக்குங்காலத்தில், அவ 6
ள் பிள்ளைப்பெறுகிறதற்குக் காலஞ் சம்பவித்தது.
அப்பொழுது அவள் தன் மூதற்பேறான குமா 7
ரனைப் பெற்று அவரைப் புடைவைகளிற் சுற்றிச் ச
த்திரத்திலே (வேறு) இடமில்லாதபடியினாலே அ
வரைப் பசுத்தொட்டியிலே வைத்தாள்.
அன்றியும் அந்தத்திசையிலே மேய்ப்பர் வெளி 8
யிலே தங்கி இராத்திரியிலே தங்கள் ஆட்டுக் கூட்
டத்தைக் காத்துக்கொண்டிருந்தார்கள்.
அப்பொழுது பராபரனுடைய தூதன் அவர்க 9
ளிடத்தில் வந்து நிற்கப் பராபரனுடைய மகிமை
அவர்களைச் சுற்றிப் பிரகாசித்தது. அவர்கள் மிக
வும் பயந்தார்கள்.
உடனே தேவதூதன் அவர்களை நோக்கிப் பய 10
ப்படாதிருங்கள். எல்லாச் சனங்களுக்குமுண்டா
கும் மிகுந் சந்தோஷத்தை உங்களுக்குச் சுவிசே
ஷமாக அறிவிக்கிறேன்.
என்னவென்றால், இன்று கர்த்தராகிய கிறிஸ்தெ 11
ன்னும் இரட்சகர் தாவீதின் ஊரிலே உங்களுக்கா
கப் பிறந்தார்.
பிள்ளையைப் புடைவைகளிற் சுற்றிப் பசுத்தொ 12
ட்டியிலே வைத்திருக்கக் காண்பீர்கள். அதுவே
உங்களுக்கு அடையாளமென்றான்.
அப்பொழுது சடுதியாய்ப் பரமண்டலத்திலுள் 13
ள மிகுந்த சேனைகள் அந்தத் தூதனுடனே கூட வி
ருந்து,

14 உன்னதங்களிலிருக்கிற பராபரனுக்குப் புகழ்ச்
சியும் பூமியிலே சமாதானமும் மனிதர்மேற் பி
ரியமும் உண்டாவதாகவென்று பராபரனைத் துதி
த்தார்கள்.
15 பின்பு தேவதூதர்கள் அவர்களை விட்டுப் பரம
ண்டலத்திற்குப் போனபொழுது மேய்ப்பர் ஒரு
வரையொருவர் நோக்கி நாம் பெத்லெகேமூருக்
குப்போய்க் கர்த்தரால் நமக்கு அறிவிக்கப்பட்டு
நடந்த இந்தச் சங்கதியைப் பார்ப்போம் வாருங்க
ளென்று சொல்லிக்கொண்டு,
16 தீவிரமாய்ப் போய் மரியாளையும் யோசேப்பை
யும் பசுத்தொட்டியிலே கிடக்கிற பிள்ளையையுங்
கண்டார்கள்.
17 பின்பு அவர்கள் அந்தப் பிள்ளையைக் குறித்துத்
தங்களுக்குச் சொல்லப்பட்ட வார்த்தையைப் பி
ரசித்தம் பண்ணினார்கள்.
18 மேய்ப்பரால் சொல்லப்பட்டவைகளைக் கேட்ட
யாவரும் அவைகளைக் குறித்து ஆச்சரியப்பட்டா
ர்கள்.
19 மரியாள் அவ் வார்த்தைகளையெல்லாந் தன் இரு
தயத்திலே காத்துச் சிந்தித்துக் கொண்டாள்.
20 மேய்ப்பருந் தங்களுடனே சொல்லப்பட்டதி
ன்படியே கேட்டுக் கண்டயாவுக்காகவும் பராபர
னைப் புகழ்ந்து துதித்துக்கொண்டு திரும்பினார்கள்.
21 பிள்ளைக்கு விருத்தசேதனஞ் செய்கிறதற்கு உரி
ய எட்டாம் நாளிலே அது கருப்பமாகிறதற்கு மு
ன்னே தேவதூதனாலே சொல்லப்பட்ட இயேசு எ
ன்னும் நாமம் அதற்குக் கொடுக்கப்பட்டது
௨௨ அல்லாமலும் மோசேயின் நியாயப்பிரமாணத்
தின்படியே அவர்களைச் சுத்திகரிப்பதற்கான நாட்
கள் நிறைவேறின பொழுது,

முதற்பேறான எந்த ஆண்பிள்ளையும் பராபரனு 23
க்குப் பிரதிஷ்டையாக்கப்பட வேண்டுமென்று ப
ராபரன் அருளிச்செய்த நியாயப்பிரமாணத்தில் எ
ழுதியிருக்கிறபடி,
அவர்கள் அதைப் பராபரனுக்கு ஒப்புக்கொ 24
டுக்கும்படிக்கும் பராபரனுடைய நியாயப்பிரமா
ணத்திற் சொல்லியிருக்கிறபடி ஒரு சோடு காட்டு
ப் புறாவை அல்லது இரண்டு புறாக்குஞ்சுகளைப் ப
லியிடும்படிக்கும் பிள்ளையை எருசலேம்பட்டினத்
திற்குக் கொண்டுபோனார்கள்.
அப்பொழுது சிமேயோனென்று பேர்கொண் 25
ட மனிதன் எருசலேமில் இருந்தான். அவன் நீதி
யுந் தேவபத்தியுமுள்ளவனாய் இஸ்ரவேலருக்கு ஆ
றுதல்செய்கிறவர் வரக்காத்திருக்கிறவனுமாயிருந்
தான். அவனிற் பரித்த ஆவி யிருந்தார்.
அல்லாமலும் பராபரனுடைய கிறிஸ்துவைக் கா 26
ணுமுன்னே நீ மரணம் அடைவதில்லையென்று ப
ரிசுத்த ஆவியினாலே அவனுக்கு உத்தரவு உண்டா
யிருந்தது.
அவன் அந்த ஆவியினாலே ஏவப்பட்டுத் தேவா 27
லயத்திலே வந்திருந்தான். அப்பொழுது இயேசு
என்னும் பிள்ளையை நியாயப்பிரமாண முறையின்
படிசெய்யத் தாய் தகப்பன்மார் அவரை உள்ளே
கொண்டுவருகையில்,
அவன் அவரைத் தன் கைகளில் ஏந்திக்கொண்டு 28
பராபரனைத் தோத்திரித்துச் சொன்னது,
ஆண்டவரே, புறத்தேசத்தார்களுக்கு அறிவை 29
க் கொடுப்பதற்கும் உம்முடைய சனங்களாகிய இ
ஸ்ரவேலருக்கு மகிமை உண்டாக்குவதற்குமான
ஒளியாய்,
உம்மாலே எல்லாச் சனங்களுக்குமுன்பாகவும், 30

31 எத்தனமாக்கப்பட்ட இரட்சகரை நான் என் கண்களாலே கண்டபடியினாலே,

32 தேவரீர் உம்முடைய வார்த்தையின்படி இப்பொழுது அடியேனைச் சமாதானத்தோடே அனுப்பிவிடுகிறீரென்றான்.

33 அப்படி அவரைக் குறித்துச் சொல்லப்பட்டவைகளை அவருடைய தாயும் யோசேப்புங் கேட்டு, ஆச்சரியப்பட்டார்கள்.

34 பின்னுஞ் சிமேயோன் அவர்களை ஆசீர்வதித்து அவருடைய தாயாகிய மரியாளுடனே சொன்னது இதோ, அநேகருடைய இருதய சிந்தனைகள் வெளியரங்கமாகும்படிக்கு,

35 இஸ்ரவேலரில் அநேகர் விழுதற்கும் எழுந்திருக்கிறதற்கும் விரோதமாய்ப் பேசப்படும் அடையாளமாயிருப்பதற்கும் இவர் நியமிக்கப்பட்டிருக்கிறார். உன் ஆத்துமாவையே ஒரு கத்தி உருவிப்போமென்றான்.

36 அல்லாமலும் ஆசேருடைய கோத்திரத்திலே பானுவேலின் குமாரத்தியுந் தீர்க்கதரிசியுமாகிய அன்னாளென்பவளிருந்தாள். அவள் கன்னியாய்ப் பின்பு ஏழு வருஷம் புருஷனுடனே வாழ்ந்து மிகுந்த வயதுசென்றவளாயிருந்தாள்.

37 ஏறக்குறைய எண்பத்தினாலு வயதுள்ள அந்தக் கைம்பெண் தேவாலயத்தை விட்டு நீங்காமல் இரவும் பகலுஞ் செபம்பண்ணி உபவாசித்து ஆராதனை செய்துகொண்டு வந்தாள்.

38 அவளும் அவ்வேளையிலே போய் நின்று பராபரனைத் துதித்து எருசலேமிலே மீட்புண்டாகக் காத்திருந்தயாவருடனேயும் அவரைக்குறித்துப் பேசினாள்.

39 பராபரனுடைய நியாயப்பிரமாணத்தின்படி சக

லத்தையும் அவர்கள் செய்துமுடித்தபின்பு கலிலே
யாதேசத்திலுள்ள தங்களூராகிய நாசரேத்தூருக்கு
த் திரும்பினார்கள்.
பிள்ளையானது வளர்ந்து ஆவியிலே பலங்கொ 40
ண்டு ஞானத்தால் நிறையப்பட்டுத் தேவ தயவுள்ள
வரானார்.
அவருடைய தாய் தகப்பன்மார் பஸ்காவின் ப 41
ண்டிகைக்கு வருஷந்தோறும் எருசலேம் பட்டண
த்திற்குப் போவார்கள்.
அந்தப்படிக்கு அவர் பன்னிரண்டுவயதானபொ 42
ழுது அவர்கள் பண்டிகை முறைமையின்படி எரு
சலேமுக்குப் போய்,
வேண்டிய நாள் அங்கே இருந்து பின்பு திரும்பி 43
வருகிறபொழுது பிள்ளையாகிய இயேசு தமது தா
ய்க்கும் யோசேப்புக்குந் தெரியாமல் எருசலேமி
லேதானே இருந்தார்.
அவர்கள் அவர் பிரயாணக்காரருடைய கூட்டத் 44
தில் இருப்பாரென்று எண்ணி ஒருநாட் பிரயாணமா
ய் நடந்துபோய் இனத்தாருக்குள்ளும் அறிமுக
மானவர்களுக்குள்ளும் அவரைத் தேடி,
அவரைக் காணாமலிருக்கிறபொழுது எருசலேமு 45
க்குத் திரும்பி அவரைத் தேடி,
மூன்று நாளைக்குப் பின்பு தேவாலயத்திலே அ 46
வர் போதகருக்குள்ளே உழுக்கார்ந்திருக்கவும் அவ
ர்களுக்குச் செவிகொடுக்கவும் அவர்களை வினவவுங்
கண்டார்கள்.
அவருடைய வசனங்களைக் கேட்ட யாவரும் அ 47
வருடைய புத்தியையும் மாறுத்தரங்களையுங் குறித்
துப் பிரமித்தார்கள்.
தாய்தகப்பன்மார் அவரைக் கண்டு அதிசயப்ப 48
ட்டார்கள். அல்லாமலும் அவருடைய தாய் அவ

ரை நோக்கி மகனே, என்னத்தினாலே நீ எங்களுக்
கு இப்படிச்செய்தாய்? இதோ உன் தகப்பனும்
நானும் விசாரத்தோடே உன்னைத் தேடினோமே
என்றாள். அதற்கு அவர்,
49 நீங்கள் என்னை ஏன் தேடினீர்கள்? நான் என் த
கப்பனுக்கு ஏற்றவைகளிலே இருக்கவேண்டியதெ
ன்று அறியீர்களா என்றார்?
50 அவர்கள் தங்களுக்கு அவர் சொன்ன வார்த்தை
யின் கருத்தை உணர்ந்துகொள்ளவில்லை.
51 பின்பு அவர் அவர்களுடனே கூடப்போய் நாச
ரேத்தூரிற் சேர்ந்து அவர்களுக்குக்கீழ் அடங்கினா
ர். நடந்த சங்கதிகளையெல்லாம் அவருடைய தா
ய் தன்னிருதயத்திற் காத்துக்கொண்டாள்.
52 இயேசுவானவர் ஞானத்தையும் வயதையும் ப
ரம்பரனிடத்திலும் மனிதரிடத்திலுந் தயையையும்
அதிகமதிகமாய் அடைந்துகொண்டார்.

---

## ௩. அதிகாரம்

1 தீபேரியு இராயன் இராச்சிய பரிபாலனம் பண்
ணின பதினைந்தாம் வருஷத்திலே, பொந்தியு பிலா
த்தென்பவன் யூதேயா நாட்டுக்குத் துரையாயும் ஏ
ரோதென்பவன் கால்பங்காகிய கலிலேயா நாட்டு
க்கு அதிபதியாயும் அவனுடைய சகோதரனாகிய பி
லிப்பென்பவன் கால்பங்காகிய இத்துரேயா நாட்
டுக்குந் திராகோனித்தி நாட்டுக்கும் அதிபதியாயும்
லிசானியென்பவன் கால்பங்காகிய அபிலேனே
நாட்டுக்கு அதிபதியாயும்,
௨ அன்னான் காய்ப்பா என்பவர்கள் பிரதான ஆசா
ரியராயும் இருந்த காலத்திலே வனாந்தரத்திற் சகரி
யாவின் குமாரனாகிய யோவானுக்குத்தேவ வசன
முண்டாயிற்று.

ஆனபடியால் அவன் யோர்தான் நதிக்கு அருகா 3
ன தேசமெங்கும் நடந்து பாவமன்னிப்புக்காக ம
னந்திருப்பும்படிக்கு ஏற்ற ஞானஸ்நானத்தைக் கு
றித்துப் பிரசங்கித்தான்.

பராபரனுக்காக மார்க்கத்தை நன்றாகச் செய்து 4
அவருக்காகப் பாதைகளைச் செம்மைபண்ணுங்க
ளென்றும்,

பள்ளங்களெல்லாம் நிரப்பப்படும். சகல மலை 5
களுங் குன்றுகளுந் தாழ்த்தப்படும். கோணலா
ன பாதைகள் செம்மையாகும். முருட்டு வழிகள்
சமனாகுமென்றும் மனிதர் எல்லாரும் பராபரனு
டைய இரட்சிப்பைக் காண்பார்களென்றும்,

வனாந்தரத்திலே கூப்பிடுகிறவனுடைய சத்தமு 6
ண்டென்று ஏசாயாத் தீர்க்கதரிசியினுடைய புஸ்த
கத்தில் எழுதியிருக்கிற பிரகாரமாகப் பிரசங்கித்தா
ன்.

ஆதலால் அவன் தன்னாலே ஞானஸ்நானம் பெ 7
றும்படிக்குப் புறப்பட்டு வந்த சனங்களை நோக்கி
விரியன்பாம்புகளின் குட்டிகளே, இனி வருங்கோ
பத்திற்கு நீங்கள் தப்பிக்கொள்ளும்படியாய் உங்க
ளுக்கு வகைகாட்டினவன் எவன்?

(தப்பவிரும்பினால்) மனந்திருப்புகிறதற்கு ஏற் 8
ற கனிகளைக் கொடுங்கள். ஆபிரகாம் எங்களுக்கு
த் தகப்பனென்று உங்கள் உள்ளத்திற் சொல்லத்
தொடங்காதிருங்கள். ஆபிரகாமுக்குப் பராபரன்
இந்தக் கற்களாற் பிள்ளைகளை உண்டுபண்ண வல்ல
வராயிருக்கிறாரென்று உங்களுக்குச் சொல்லுகிறே
ன்.

அல்லாமலும் இப்பொழுதே கோடரியானது 9
மரங்களின் வேரருகில் வைத்திருக்கின்றது. ஆகை
யால் நல்ல கனிகொடாத மரங்களெல்லாம் வெட்

டப்பட்டு அக்கினியிலே போடப்படுமென்றான்.
10 அப்பொழுது சனங்கள் அவனை நோக்கி அப்ப
டியானால் நாங்கள் என்ன செய்யவேண்டுமென்று
கேட்டார்கள்.
11 அவர்களுக்கு மாறுத்தரமாக அவன் சொன்ன
து இரண்டு சட்டைகளை உடையவன் சட்டை இல்
லாதவனுக்குக் கொடுக்கக்கடவன். ஆகாரமுடை
யவனும் அப்படியே செய்யக்கடவனென்றான்.
12 பின்பு ஆயக்காரரும் ஞானஸ்நானம் பெறும்ப
டிக்கு அவனிடத்திற் சேர்ந்து போதகரே, நாங்க
ள் என்ன செய்யவேண்டுமென்றார்கள்.
13 அவர்களுடனே அவன் சொன்னது, உங்களுக்கு
க் கட்டளையிடப்பட்டதற்கு மேலாக ஒன்றையும்
பலபந்தமாய்க் கேட்டுக்கொள்ளாதிருங்களென்றா
ன்.
14 போர்ச் சேவகரும் அவனை நோக்கி நாங்கள் எ
ன்ன செய்ய வேண்டுமென்று கேட்டார்கள். அ
வர்களுடனே அவன் சொன்னது, நீங்கள் ஒருவனு
க்கும் இடுக்கண் செய்யாமலும் ஒருவனைக் குறித்
தும் பொய்ச்சாட்சி சொல்லாமலும் உங்கள் சம்ப
ளமே போதுமென்றெண்ணிக் கொண்டிருக்கக் க
டவீர்களென்றான்.
15 அப்பொழுது சனங்கள் காத்திருந்து யோவான்
கிறிஸ்துவாயிருக்கிறாரோவென்று எல்லாருந் தங்க
ள் இருதயங்களில் அவனைக் குறித்துச் சிந்தனை
கொண்டிருக்கிறபொழுது,
16 யோவான் எல்லாருடனேயுஞ் சொன்னது, நான்
சலத்தினாலே உங்களுக்கு ஞானஸ்நானங் கொடுக்கி
றேன். என்னிலும் அதிக பலத்தவர் வருகிறார். அ
வருடைய பாத இரட்சைகளின் வாரை அவிழ்க்கிற
தற்கு நான் பாத்திரனல்ல. அவர் பரிசுத்த ஆவி

யினுலும் அக்கினியினுலும் உங்களுக்கு ஞானஸ்நா
னங் கொடுப்பார்.
தூற்றுஞ் சுழகு அவருடைய கையில் இருக்கின்ற 17
து. அவர் தமது களத்தை நன்ருய் விளக்கிக் கோ
தும்பையைத் தமது களஞ்சியத்திலே சேர்த்துப்
பதரை அவியாத அக்கினியினுற் சுட்டெரிப்பாரெ
ன்று சொன்னதுமன்றி,
மற்றும் அநேகம் புத்திகளைச் சொல்லிச் சனங் 18
களுக்குச் சுவிசேஷத்தை அறிவித்தான்.
அப்படி இருக்குங் காலத்திலே காற்பங்கு தே 19
சாதிபதியாகிய ஏரோதென்பவன் தன் சகோதரு
ன பிலிப்புவினுடைய மனைவியாகிய ஏரோதியா
ளின் நிமித்தமாகவும் மற்றப் பொல்லாங்குகளைச்
செய்ததின் நிமித்தமாகவும் யோவானுற் கடிந்து
கொள்ளப்பட்டபொழுது,
தான் செய்து வந்த பொல்லாங்குகள் யாவையு 20
மன்றி யோவானையுஞ் சாவவில் அடைத்தான்.
சனங்கள் எல்லாரும் ஞானஸ்நானம் பெற்றுக் 21
கொண்ட காலத்தில் இயேசுவானவரும் ஞானஸ்நா
னம் பெற்ருர். அப்பொழுது அவர் செபம்பண்
ணுகையில் வானந் திறக்கப்பட்டது மல்லாமல்,
கண்ணுக்குத் தோன்றிய உருவாய் ஒரு புரு வை 22
ப்போலப் பரிசுத்த ஆவியானவர் அவர் மேல் இற
ங்கினுர். அன்றியும் நீர் எனக்கு அன்பான குமா
ரனுயிருக்கிறீர். உம்மிற் பிரியமாயிருக்கிறேனெ
ன்று வானத்திலிருந்து சத்தமுண்டாயிற்று.
இப்படி இயேசுவானவர் ஏறக்குறைய முப்ப 23
து வயதுள்ளவராய் வெளிப்படத் தொடங்கினுர்.
சனங்கள் அவரை யோசேப்பின் குமாரனென் 24
று எண்ணினுர்கள்.
அந்த யோசேப்பு ஏலியின் குமாரன். ஏலி, மா 25

த்தாத்தின் குமாரன். மாத்தாத்து, இலேவியின் கு
மாரன். இலேவி, மெல்கியின் குமாரன் மெல்
கி, இயன்னாவின் குமாரன். இயன்னா, யோசேப்பி
ன் குமாரன். யோசேப்பு, மத்தத்தியாவின் குமா
ரன். மத்தத்தியா, ஆமோசின் குமாரன். ஆமோ
சு, நாகூமின் குமாரன். நாகூம், எஸ்லீயின்குமார
ன். எஸ்லீ, நங்காயின் குமாரன்.
26 நங்காய், மாகாத்தின் குமாரன். மாகாத்து, ம
த்தத்தியாவின் குமாரன். மத்தத்தியா, சேமேயி
ன் குமாரன். சேமேய், யோசேப்பின் குமாரன்.
யோசேப்பு, யூதாவின் குமாரன். யூதா, யோவ
ன்னாவின் குமாரன்.
27 யோவன்னா, இரேசாவின் குமாரன். இரேசா,
சொரோபாபேலின் குமாரன். சொரோபாபே
ல், சலாத்தியேலின் குமாரன். சலாத்தியேல், நே
ரியின் குமாரன்.
28 நேரி, மெல்கியின் குமாரன். மெல்கி, அத்தி
யின் குமாரன். அத்தி, கோசாமின் குமாரன். கோ
சாம், எல்மோதாமின் குமாரன். எல்மோதாம், ஏ
ரின் குமாரன். ஏர், யோசேயின் குமாரன்.
29 யோசே, எலியேசரின் குமாரன். எலியேசர்,
யோரைமின் குமாரன். யோரைம், மாத்தாத்தின்
குமாரன். மாத்தாத்து, இலேவியின் குமாரன்.
30 இலேவி, சிமையோனின் குமாரன். சிமையோ
ன், யூதாவின் குமாரன். யூதா, யோசேப்பின் கு
மாரன். யோசேப்பு, யோனானுடைய குமாரன்.
யோனான், எலியாக்கீமின் குமாரன்.
31 எலியாக்கீம், மெலேயாவின் குமாரன். மெலே
யா, மயினானுடைய குமாரன். மயினான், மாத்தா
த்தாவின் குமாரன். மாத்தாத்தா, நாத்தானுடைய
குமாரன். நாத்தான், தாவீதின் குமாரன்.

தாவீது, யேசாயின் குமாரன். யேசாய், ஓபே 32
தின் குமாரன். ஓபேது, போவோசின் குமாரன்.
போவோசு, சல்மோனுடைய குமாரன். சல்மோ
ன், நாகசோனுடைய குமாரன்.

நாகசோன், அமினதாபின் குமாரன். அமின 33
தாபு, ஆராமின் குமாரன். ஆராம், எஸ்ரோமின்
குமாரன். எஸ்ரோம், பாரேசின் குமாரன். பா
ரேசு, யூதாவின் குமாரன். யூதா, யாக்கோபின் கு
மாரன்.

யாக்கோபு, இசாக்கின் குமாரன். இசாக்கு, ஆ 34
பிரகாமின் குமாரன். ஆபிரகாம், தாராவின் குமா
ரன். தாரா, நாகோரின் குமாரன்.

நாகோர், சேரூகின் குமாரன். சேரூகு, இரா 35
குவின் குமாரன். இராகு, பலேக்கின் குமாரன்.
பலேக்கு, ஏபேரின் குமாரன்.

ஏபேர், சாலாவின் குமாரன். சாலா, கேனானு 36
டைய குமாரன். கேனான், அருப்பகுசாத்தின் கு
மாரன். அருப்பகுசாத்து, சேமின் குமாரன்.
சேம், நோவாவின் குமாரன். நோவா, லாமேகின்
குமாரன்.

லாமேகு, மெத்தூசலாகின் குமாரன். மெத்தூ 37
சலாகு, ஏனோகின் குமாரன். ஏனோகு, யாரேத்தி
ன் குமாரன். யாரேத்து, மகெலலேயேலின் குமா
ரன். மகெலலேயேல், காயினானுடைய குமாரன்.
காயினான், ஏனோசின் குமாரன்.

ஏனோசு, சேத்தினுடைய குமாரன். சேத்து, 38
ஆதாமின் குமாரன். ஆதாம், பராபரனாலுண்டா
னவன்.

---

## ௪. அதிகாரம்.

இயேசுவானவர் பரிசுத்த ஆவியினாலே நிறைந் 1

தவராய் யோர்தானை விட்டுத் திரும்பி ஆவியினாலே
வனாந்தரத்திற் கொண்டு போகப்பட்டார்.
2 அங்கே நாற்பது நாட் பசாசினாலே சோதிக்கப்
பட்டு அந்நாட்களிலே ஒன்றும் புசியாமலிருந்தார்.
3 அவைகள் முடிந்தபின்பு அவருக்குப் பசி உண்
டாயிற்று. அப்பொழுது பசாசானவன் அவரை
நோக்கி நீ தேவனுடைய குமாரனானால் இந்தக் கல்
லை அப்பமாகும்படி சொல்லென்றான்.
4 அதற்கு இயேசுவானவர் மனிதன் அப்பத்தினா
லே மாத்திரமல்ல, பராபரனுடைய வார்த்தை எ
துவோ அதினாலும் பிழைப்பானென்று எழுதியிரு
க்கிறதென்றார்
5 பின்பு பசாசானவன் அவரை உயர்ந்த மலையின்
மேற் கொண்டுபோய் ஒரு நிமிஷத்திலே உலகத்தி
ன் இராச்சியங்களை எல்லாம் அவருக்குக் காண்பி
த்து,
6 இவை யெல்லாவற்றின்மேலும் அதிகாரமும் இ
வைகளின் மகிமையும் எனக்கு ஒப்புக்கொடுக்கப்
பட்டிருக்கிறபடியால் நான் இவைகளை உனக்குத்
தருவேன். என் இஷ்டப்படிக்கே நான் இவைகளை
எவனுக்குங் கொடுக்கிறேன்.
7 ஆகையால் நீ என்னைத்தொழுதுகொண்டால் எ
ல்லாம் உன்னுடையதாயிருக்குமென்று அவருட
னே சொன்னான்.
8 இயேசுவானவர் அவனுக்குச் சொன்னது சாத்
தானே, நீ எனக்குப் பின்னாகப்போ. உன் தேவ
னாகிய பாரபரனைத் தொழுதுகொண்டு அவர் ஒரு
வருக்கே ஆராதனை செய்வாயாகவென்று எழுதியி
ருக்கின்றதே என்றார்.
9 அன்றியும் அவன் அவரை எருசலேம் பட்டினத்
திற்குக் கொண்டு போய் அவரைத் தேவாலயத்தின்

டெப்பரிகையின் மேல் நிறுத்தி உன்னைக் காப்பாற்று
ம்படிக்கு உன்னைக் குறித்துத் தமது தூதர்களு
க்குக் கட்டளை யிடுவாரென்றும்,
உன் கால் கல்லில் இடறாதபடிக்கு அவர்கள் தங் 10
கள் கைகளில் உன்னை ஏந்திக்கொண்டு போவார்க
ளென்றும் எழுதியிருக்கிறது.
ஆகையால் நீ தேவனுடைய குமாரனானால் இங் 11
கேயிருந்து தாழக்குதியென்று அவருடனே சொ
ன்னான்
அதற்கு மாறுத்தரமாக இயேசுவானவர் சொ 12
ன்னது, உனது தேவனாகிய பராபரனைப் பரிட்சை
பாராதிருப்பாயாக வென்று சொல்லியிருக்கின்ற
தென்றார்
பசாசானவன் (அவரை) சோதித்தவகைகளை எ 13
ல்லாம் முடித்த பொழுது சிலகாலம் அவரை விட்
டுப் போனான்.
பின்பு இயேசுவானவர் ஆவியினுடைய பலத்தினா 14
லே கலிலேயா நாட்டுக்குத் திரும்பினார். அதைச்
சூழ்ந்திருக்கிற தேசமெங்கும் அவருடைய கீர்த்தி
பரவிற்று.
அல்லாமலும் அவர்களுடைய செபஆலயங்களில் 15
அவர் உபதேசம்பண்ணி எல்லாராலும் புகழ்ச்சி அ
டைந்தார்.
அவர் தாம் வளர்ந்த நாசரேத்தூருக்குப்போய் 16
த் தமக்கு வழக்கமானபடி ஓய்வுநாளிலே செபஆ
லயத்திற் பிரவேசித்து வாசிக்க எழுந்து நிற்கிற
பொழுது,
ஏசாயாதீர்க்கதரிசியின் புத்தகத்தை அவருக்குக் 17
கொடுத்தார்கள். அந்தப் புத்தகத்தை அவர் விரி
த்த பொழுது,
பராபரனுடைய ஆவி என்னில் இருக்கின்றது. 18

தரித்திரருக்கு நான் சுவிசேஷத்தை அறிவிக்கும்ப
டி எனக்கு அபிஷேகம் பண்ணினார். நருங்குண்ட
வர்களைக் குணமாக்கும்படிக்குஞ் சிறைப்பட்டவ
ர்களுக்கு விடுதலையையுங் குருடருக்குப் பார்வை
யையும் பிரசங்கிக்கும்படிக்கும் நொறுங்குண்டவ
ர்களை விடுதலையாக்கி,
19 பராபரனாலே அங்கிகரிக்கப்படுவதற்கான வருஷ
த்தைப் பிரசங்கிக்கும்படிக்கும் என்னை அனுப்பி
னாரென்று எழுதியிருந்த இடத்தைக்கண்டு,
20 புத்தகத்தைச் சுருட்டி ஊழியக்காரனிடத்திற்
கொடுத்து உளுக்கார்ந்தார். செப ஆலயத்திலுள்
ள எல்லாருடைய கண்களும் அவர் மேலே நோக்க
மாயிருந்தன.
21 அப்பொழுது அவர் அவர்களுடனே பேசத்
தொடங்கி நீங்கள் கேட்ட வேதவாக்கியம் இன்றை
த்தினமே நிறைவேறிற்றென்றார்.
22 எல்லாரும் அவருக்கு நல்ல சாட்சிகொடுத்து அ
வர் திருவாய்மலர்ந்தருளிச்செய்த கிருபையுள்ள வ
சனங்களைக் குறித்து ஆச்சரியப்பட்டுப் பின்பு இ
வன் யோசேப்பினுடைய குமாரனல்லவோ என்றா
ர்கள்.
23 அவர்களுடனே அவர் சொன்னது, வயித்தியனே
உன்னைத்தானே குணமாக்கு என்கிற வழக்கச் சொ
ல்லையும் நாங்கள் கேள்விப்பட்டபடி கப்பர்நகூ
மூரில் (உன்னாலே) செய்யப்பட்டது எதுவோ அ
தை உன் ஊராகிய இவ்விடத்திலேயுஞ் செய் என்
பதையும் நீங்கள் என்னுடனே சொல்லுவீர்களென்
பதற்குச் சந்தேகமில்லை.
24 அப்படியிருக்கத் தீர்க்கதரிசியானவன் தன் ஊ
ரிலே அங்கிகரிக்கப்பட்டவனல்லவென்று மெய்யா
கவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

25 அன்றியும் எலியாவின் காலத்திலே மூன்று வருஷமும் ஆறுமாதமும் வானம் அடைக்கப்பட்டுத் தேசமெங்கும் மிகுந்த பஞ்சமுண்டாயிருந்தபொழுது இஸ்ரவேலருக்குள்ளே அநேகங் கைம்பெண்களிருந்தும்,

26 சிதோன் நாட்டிலுள்ள சரெப்பத்தா ஊரிலிருந்த ஒரு கைம்பெண்ணிடத்திற்கேயன்றி மற்றொருத்தியினிடத்திற்கும் எலியா என்பவர் அனுப்பப்படவில்லை.

27 அல்லாமலும் எலிசா என்னுந் தீர்க்கதரிசியின் காலத்திலே இஸ்ரவேலருக்குள்ளே அநேகங் குஷ்டரோகிகள் இருந்துஞ் சீரியதேசத்தானாகிய நாகமானே அன்றி அவர்களில் வேறொருவனுஞ் சுத்தமாக்கப்படவில்லையென்று சத்தியத்தின்படியே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

28 செப ஆலயத்திலிருந்த எல்லாரும் இவைகளைக் கேட்டபொழுது,

29 கோபத்தால் நிரப்பப்பட்டு எழுந்து அவரை ஊருக்குப் புறம்பே தள்ளித் தங்கள் ஊருக்கு அடுத்த செங்குத்தான மலையின் சிகரத்திலிருந்து அவரைத் தாழத் தள்ளும்படிக்கு அவ்விடத்திற்குக் கொண்டுபோனார்கள்.

30 அவர் அவர்கள் மத்தியினின்று கடந்துபோனார்.

31 பின்பு அவர் கலிலேயாதேசத்திலுள்ள கப்பர்நாகூம் பட்டினத்திற்குப்போய் ஓய்வுநாட்களிற் சனங்களுக்கு உபதேசம்பண்ணினார்.

32 அவருடைய வசனம் அதிகாரமுள்ளதாயிருந்தபடியினாலே அவர்கள் அவருடைய உபதேசத்தைக் குறித்துப் பிரமித்தார்கள்.

33 அல்லாமலுஞ் செப ஆலயத்திலே அசுத்தமான ஆவியுள்ள ஒரு மனிதனிருந்தான்,

34 அவன் (அவரைக் கண்டு) ஐயோ! நாசரேத்தூ
ராகிய இயேசுவே, எங்களுக்கும் உமக்குமென்
ன? எங்களைக் கெடுக்கவா வந்தீர்? உம்மை அறிந்
திருக்கிறேன். நீர் பராபரனுடைய பரிசுத்தரே எ
ன்று மிகுந்த சத்தத்துடனே கூப்பிட்டான்.
35 அதற்கு இயேசுவானவர் நீ பேசாமல் இவனைவி
ட்டுப் போவென்று அதை அதட்டினார். அப்பொ
ழுது பசாசு அவனைச் சனங்களுக்குள்ளே தள்ளி அ
வனுக்கு ஒரு சேதமுஞ் செய்யாமல் அவனை விட்
டுப் போயிற்று.
36 எல்லாரும் பிரமிப்படைந்து இவர் அதிகாரத்
தோடும் வல்லமையோடும் அசுத்த ஆவிகளுக்குக்
கட்டளையிட அவைகளும் புறப்படுகின்றனவே. இ
தென்ன வசனமென்று ஒருவரோடொருவர் சொ
ல்லிக்கொண்டார்கள்.
37 அவருடைய கீர்த்தி அத்தேசத்திலுள்ள இடங்க
ள் யாவிலும் பிரசித்தமாயிற்று.
38 பின்பு அவர் செப ஆலயத்தைவிட்டுச் சீமோ
னென்பவனுடைய வீட்டுக்குப் போனார். சீமோ
னுடைய மாமி மிகுந்த சுரமாய்க் கிடந்தாள். அவ
ளுக்காக அவரை வேண்டிக்கொண்டார்கள்.
39 அப்பொழுது அவர் அவளிடத்திற் குனிந்து நி
ன்று சுரத்தை அதட்டினார். அது அவளை விட்டு நீ
ங்கிற்று. உடனே அவள் எழுந்திருந்து அவர்களு
க்குப் பணிவிடை செய்தாள்.
40 பின்பு சூரியன் அஸ்தமித்தபொழுது அநேக
சனங்கள் தங்களிடத்திலிருந்த பல வியாதிகளுள்ள
வர்களை அவரிடத்திற்குக் கொண்டுபோனார்கள்.
அவர்கள் எல்லார் மேலும் அவர் தமது கைகளை
வைத்து அவர்களைக் குணமாக்கினார்.
41 அநேகரிடத்திலிருந்து பசாசுகளும் புறப்பட்

டன. அவைகள் நீர் பராபரனுடைய குமாரனாகி
ய கிறிஸ்து என்று கூப்பிட்டன. அவர் தம்மைக்
கிறிஸ்து என்று அவைகள் அறிந்த படியினாலே அ
வைகள் பேசுகிறதற்கு இடங்கொடாமல் அதட்டி
னார்.
உதயமான பொழுது அவர் புறப்பட்டு வனாந்த 42
ரமான இடத்திற்குப் போனார். சனங்கள் அவரை
த் தேடி அவரிடத்திற் போய்த் தங்களை விட்டுப்
போகாதபடிக்கு அவரை நிறுத்திக்கொண்டார்கள்.
அதற்கு அவர் அவர்களை நோக்கி நான் மற்ற ஊ 43
ர்களுக்கும் பராபரனுடைய இராச்சியத்தைச் சுவி
சேஷமாய் அறிவிக்க வேண்டும். அதற்காகவே அ
னுப்பப்பட்டேன் என்றார்.
அந்தப்படி அவர் கலிலேயா தேசத்திலுள்ள செ 44
ப ஆலயங்களிற் பிரசங்கம் பண்ணிக்கொண்டு வந்
தார்.

---

## ௫. அதிகாரம்.

ஒருகாலத்திலே சனங்கள் பராபரனுடைய வச 1
னத்தைக் கேட்கும்படிக்கு அவரை நெருக்கி இரு
க்கிற பொழுது அவர் கெனேசரேத்து என்னப்ப
ட்ட சின்னக் கடலின் அருகே நின்று,
கடற்கரையில் இரண்டு படவுகளில் இருந்து மீ 2
ன் பிடிக்கிறவர்கள் இறங்கி வலைகளை அலசிக்கொ
ண்டிருக்க அவ்விரண்டு படவுகளையுங் கண்டு,
அவைகளின் ஒன்றாகிய சீமோனுடைய படவில் 3
ஏறி அதைக் கரையிலிருந்து சற்றே தள்ளும்படிக்
கு அவனை வேண்டிக்கொண்டு அதிலே உட்கார்ந்
து அங்கே இருந்து சனங்களுக்கு உபதேசம்பண்
ணினார்.

4 அவர் உபதேசித்து முடித்த பின்பு சீமோனை
நோக்கி நீ ஆழத்திலே தள்ளிக் கொண்டுபோய் மீ
ன் பிடிக்கும்படிக்கு உங்கள் வலைகளைத் தாழ விடுங்
களென்றார்.
5 சீமோன் அவருக்கு மாறுத்தரமாகச் சொன்ன
து, ஐயரே, இராமுழுவதும் நாங்கள் பிரயாசப்ப
ட்டும் ஒன்றும் அகப்படவில்லை. அப்படியிருந்
தும் உம்முடைய சொல்லின்படி வலையைத் தாழ
விடுகிறேனென்றான்.
6 அந்தப்படி அவர்கள் செய்தபொழுது அவர்க
ளுடைய வலை கிழிந்துபோகத் தக்கதாக மிகுந்த
மீன்களைச் சேர்த்துக் கொண்டார்கள்.
7 அப்பொழுது மற்றப் படவிலிருந்த பங்காளிக
ள் வந்து தங்களுக்கு உதவி செய்யும்படிக்கு அவ
ர்களுக்குச் சயிக்கை காட்டினார்கள். அவர்கள்
போய் இரண்டு படவுகளையும் அமிழ்த்தத்தக்க பா
ரமாக நிரப்பினார்கள்.
8 சீமோன் பேதுரு அதைக் கண்டு இயேசுவினு
டைய முழங்கால்களின் அருகே விழுந்து ஆண்ட
வரே, நான் பாவியாயிருக்கிறபடியினாலே நீர் எ
ன்னைவிட்டுப் போகவேண்டுமென்றான்.
9 அவர்கள் அவ்வளவு மீன்களைப் பிடித்ததினிமித்
தம் அவனுக்கும் அவனோடிருந்த யாவருக்குந் திகி
லுண்டானபடியினாலே அப்படிச் சொன்னான்.
10 சீமோனுடைய தோழராகிய செபெதேயுவின்
குமாரனாகிய யாக்கோபுக்கும் யோவானுக்கும் அ
ந்தப்படியே உண்டாயிற்று. அப்பொழுது இ
யேசுவானவர் சீமோனை நோக்கி நீ பயப்பட வே
ண்டாம். இது முதல் நீ மனிதரைப் பிடிக்கிறவ
னாய் இருப்பாயென்றார்.
11 பின்பு அவர்கள் படவுகளைக் கரையோரத்திலே

கொண்டுபோய் நிறுத்தி எல்லாவற்றையும் விட்டு
அவருக்குப் பின் சென்றார்கள்.

மேலும் அவர் ஒரு ஊரிலிருக்கையிற் குஷ்ட 12
ரோகம் நிறைந்த ஒரு மனிதன் இயேசுவானவரை
க் கண்டு வணக்கமாய் விழுந்து ஆண்டவரே, உமக்
குச் சித்தமுண்டானால் என்னைச் சுத்தமாக்க உம்மா
லாமென்று அவரை வேண்டிக்கொண்டான்.

அவர் தமது கையை நீட்டி அவனைத் தொட்டுஎ 13
னக்குச் சித்தமுண்டு சுத்தமாகு என்றார். உடனே
குஷ்டரோகம் அவனை விட்டு நீங்கிற்று.

பின்பு அவர் அவனை நோக்கி நீ இதை ஒருவருக் 14
குஞ் சொல்லாமற் போய் உன்னை ஆசாரியனுக்கு
க் காண்பித்துச் சனங்களுக்குச் சாட்சியாகமோசே
நியமித்தபடியே நீ சுத்தமானதைக் குறித்துப் பலி
செலுத்தென்று கட்டளையிட்டார்.

அப்படியிருந்தும் அவருடைய கீர்த்தி அதிகமா 15
கப் பரவிற்று. அநேக சனங்கள் அவருடைய உப
தேசத்தைக் கேட்கும்படிக்கும் அவராலே தங்கள்
வியாதிகளில் நின்று சுகம் அடைந்துகொள்ளும்ப
டிக்குங் கூடிவந்தார்கள்.

அவர் வனாந்தரத்திலே தனித்துப்போய்ச் செ 16
பம்பண்ணிக்கொண்டிருந்தார்.

அன்றியும் ஒருநாளிலே அவர் உபதேசித்துக்கொ 17
ண்டிருக்கிற பொழுது கலிலேயாநாட்டிலும் யூதே
யா நாட்டிலுமுள்ள சகல கிராமங்களிலிருந்தும் எ
ருசலேம் பட்டணத்திலிருந்தும் வந்த பரிசேயரும்
நியாய சாஸ்திரிகளும் உழுக்கார்ந்திருந்தார்கள். பி
ணியாளிகளைக் குணமாக்கத்தக்கதாகக் கர்த்தரு
டைய பலம் உண்டாயிற்று.

அப்பொழுது சில மனிதர் திமிர்வாதக்காரன் ஒரு 18
வனைப்படுக்கையோடே எடுத்துக்கொண்டு உள்ளே

போகவும் அவர் முன்பாக வைக்கவும் வகைதேடி,
19 மிகுந்த கூட்டம் இருந்தபடியினாலே அவனை உ
ள்ளே கொண்டுபோகிறதற்கு இடங்காணாமல் வீட்
டின் மேல் ஏறித் தட்டோடுகளின் வழியாய்ப் படு
க்கையுடனே கூட நடுவிலே இயேசுவுக்கு முன்பா
க அவனை இறக்கினார்கள்.
20 அவர்களுடைய விசுவாசத்தை அவர் கண்டு மனி
தனே, உன்பாவங்கள் உனக்கு மன்னிக்கப்பட்டன
என்று அவனுடனே சொன்னார்.
21 அப்பொழுது வேதபாரகரும் பரிசேயரும்யோ
சனைபண்ணிச் சொன்னது, தேவதூஷணங்களைச்
சொல்லுகிற இவன் யாவன்? பராபரன் ஒருவரே த
விரப் பாவங்களை மன்னிக்கத் திராணியுள்ளவர் யா
ரென்றார்கள்.
22 இயேசுவானவர் அவர்களுடைய யோசனைகளை
அறிந்து அவர்களை நோக்கி நீங்கள் உங்கள் இருத
யங்களில் சிந்திக்கிறதென்ன?
23 உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டன என்று சொ
ல்லுகிறதோ? எழுந்து நட என்று சொல்லுகிற
தோ? எது எளிது?
24 பூமியிலே பாவங்களை மன்னிக்கிறதற்கு மனித
னுடைய குமாரன் அதிகாரமுடையவனென்று நீங்
கள் அறியும்படிக்கு (பாருங்களென்று) சொல்லித்
திமிர்வாதக்காரனை நோக்கி நீ எழுந்து உன் படுக்
கையை எடுத்துக்கொண்டு உன் வீட்டுக்குப் போ
என்று உனக்குச் சொல்லுகிறேன் என்றார்.
25 உடனே அவன் அவர்களுக்கு முன்பாக எழுந்தி
ருந்து தன் படுக்கையை எடுத்துக்கொண்டு பராப
ரனைப் புகழ்ந்து தன் வீட்டுக்குப் போனான்.
26 ஆதலால் எல்லாரும் பிரமிப்படைந்து பராபர
னைப் புகழ்ந்தார்கள். அல்லாமலும் அவர்கள் பய

த்தால் நிறையப்பட்டு அதிசயமானவைகளை இன்று
கண்டோமென்றார்கள்.

அதின் பின்பு அவர் புறப்பட்டு ஆயத்துறையில் 27
உட்க்கார்ந்திருந்த இலேவியென்னும் ஆயக்காரனை
க் கண்டு நீ எனக்குப் பின்சென்று வா என்றார்.

அந்தப்படி அவன் எல்லாவற்றையும் விட்டு எழு 28
ந்திருந்து அவருக்குப் பின்சென்றான்.

அல்லாமலும் அந்த இலேவியென்பவன் தன் வீ 29
ட்டிலே அவருக்குப் பெரிய விருந்துபண்ணினான்.
அநேக ஆயக்காரரும் மற்றப்பேர்களும் அவர்க
ளுடனே பந்தியிருந்தார்கள்.

உடனே அவ்விடத்து வேதபாரகரும் பரிசேய 30
ரும் அவருடைய சீஷருக்கு விரோதமாக முறு
முறுத்து என்னத்தினாலே நீங்கள் ஆயக்காரரோ
டும் பாவிகளோடும் போசனபானம் பண்ணுகிறீர்
கள் என்றார்கள்.

இயேசுவானவர் அவர்களுக்கு மாறுத்தரமாகச் 31
சொன்னது, சொஸ்தமுள்ளவர்களுக்கு வயித்தியன்
வேண்டுவதில்லை. வியாதியுள்ளவர்களுக்கே அவன்
வேண்டும்.

மேலும் நீதிமான்களையல்ல, பாவிகளையே மன 32
ந்திரும்பும்படிக்கு அழைக்கவந்தேன் என்றார்.

பின்பு அவர்கள் அவரை நோக்கி யோவானுடை 33
ய சீஷரும் பரிசேயருடைய சீஷரும் அநேகந்தர
ம் உபவாசம்பண்ணிச் செபமந்திரங்களைச் சொல்
லிக்கொண்டு வருகிறார்களே. உம்முடைய சீஷர்
போசனபானம் பண்ணலாமா என்றார்கள்.

அதற்கு அவர் சொன்னது, மணவாளன் கலியா 34
ணத்திற்கு வந்த மனிதரோடிருக்குங் காலத்திலே
நீங்கள் அவர்களை உபவாசம் பண்ணும்படி செய்ய
க்கூடுமோ!

35 மணவாளன் அவர்களை விட்டு நீக்கப்படும் நாட்
கள் வரும், அப்பொழுது அவர்கள் உபவாசிப்பார்
களென்று சொல்லி,
36 பின்னும் உவமையாய்ச் சொன்னது, ஒருவனும்
புதிய வஸ்திரத்துண்டைப் பழைய வஸ்திரத்தோ
டே இணைக்கமாட்டான். இணைத்தாற் புதியதான
து (பழையதைக்) கிழிக்கும். அல்லாமலும் புதிய
வஸ்திரத்துண்டு பழையதற்கு ஒவ்வமாட்டாது.
37 அன்றியும் ஒருவனும் புதிய திராட்ச இரசத்தை
ப் பழைய துருத்திகளில் வார்த்து வைக்கமாட்டா
ன். வைத்தாற் புதிய இரசந் துருத்திகளைக் கிழித்
துப்போடும். அப்பொழுது அது சிந்திப்போம்.
துருத்திகளுங் கெட்டுப்போம்.
38 புதிய இரசத்தைப் புதிய துருத்திகளில் வார்த்து
வைத்தால் இரண்டுங் காத்துக்கொள்ளப்படும்.
39 அல்லாமலும் பழைய இரசத்தைப் பானம்பண்
ணுகிறவன் உடனே புதிய இரசத்தை விரும்பமாட்
டான். பழைய இரசம் அதிக நல்லதென்று சொ
ல்வானே என்றார்.

---

௬. அதிகாரம்.

1 புளியாத அப்பங்களைச் சாப்பிடுகிற நாட்களில்
இரண்டாம் நாளுக்குப் பின்வந்த முதலாம் ஓய்வு
நாளிலே அவர் பயிர்வழியே நடந்துபோகிறபொ
ழுது அவருடைய சீஷர் கதிர்களைக்கொய்து கைக
ளிலே கசக்கித் தின்றார்கள்.
௨ அவர்களுடனே பரிசேயரிற் சிலர் ஓய்வுநாட்க
ளிற் செய்யத்தகாததை நீங்கள் செய்யவேண்டுவ
தென்ன என்றார்கள்.
3 அவர்களுக்கு மாறுத்தரமாக இயேசுவானவர்

சொன்னது, தாவீதும் அவனோடிருந்தவர்களும்
பசியாயிருந்தபொழுது அவன் தேவாலயத்திற் பிர
வேசித்து,
ஆசாரியர் மாத்திரமே அன்றி மற்றொருவரும் பு 4
சிக்கத் தகாத தேவசமூகத்தப்பங்களை எடுத்துப்
புசித்துப் பின்பு தன்னோடிருக்கிறவர்களுக்குங்
கொடுத்தாரென்று நீங்கள் வாசிக்கவில்லையா என்
று சொல்லி,
பின்பு மனிதனுடைய குமாரன் ஓய்வுநாளுக்கு 5
த்தும் ஆண்டவராயிருக்கிறாரென்று அவர்களுட
னே சொன்னார்.
மற்றொரு ஓய்வுநாளிலே அவர் செப ஆலயத்தி 6
ற் பிரவேசித்து உபதேசித்தார். அங்கே சூம்பின
வலதுகையையுடைய ஒரு மனிதனிருந்தான்.
அப்பொழுது வேதபாரகரும் பரிசேயரும் அ 7
வரிடத்திற் குற்றங்காணும்படிக்கு ஓய்வுநாளிலுங்
குணமாக்குவாரோவென்று எண்ணி அவரை நோக்கி
க் காத்திருந்தார்கள்.
அவர்களுடைய யோசனைகளை அவர் அறிந்து சூ 8
ம்பின கையையுடையவனை நோக்கி நீ எழுந்து நடு
வே நில்லென்றார். அந்தப்படி அவன் எழுந்து நி
ன்றான்.
அப்பொழுது இயேசுவானவர் அவர்களை நோக் 9
கி நான் உங்களிடத்தில் ஒன்று கேட்கிறேன். ஓய்
வுநாட்களில் நன்மைசெய்கிறதோ தீமைசெய்கிற
தோ சீவனைக்காக்கிறதோ அழிக்கிறதோ எது நியா
யமென்று சொல்லி,
அவர்கள் எல்லாரையுஞ் சுற்றிப்பார்த்து அந்த 10
மனிதனை நோக்கி உன் கையை நீட்டென்றார். அவ
ன் அப்படிச் செய்தான். உடனே அவனுடைய
கை மறுகையைப்போலச் சொஸ்தமாயிற்று.

11 பின்பு அவர்கள் மதியில்லாமையால் நிறையப்ப
ட்டு இந்த இயேசுவை என்னசெய்யலாமென்று ஒ
ருவரோடொருவர் பேசிக்கொண்டார்கள்.
12 அன்றியும் அந்நாட்களில் அவர் செபம்பண்ணு
ம்படிக்கு மலைக்குப் போய் இராத்திரி முழுவதும்
பராபரனை நோக்கிச் செபம்பண்ணிக்கொண்டு,
13 பின்பு உதயமாகிறபொழுது தமது சீஷரை வர
வழைத்து,
14 அவர்களிற் பேதுருவென்று தாம் பேரிட்ட சீ
மோனையும், அவனுடைய சகோதரனாகிய அந்திரே
யாவையும், யாக்கோபையும், யோவானையும், பிலி
ப்புவையும், பர்த்தொலொமேயுவையும்,
15 மத்தேயுவையும், தோமாவையும் அல்பேயுவினு
டைய குமாரனாகிய யாக்கோபையும், வைராக்கிய
னென்னப்பட்ட சீமோனையும்,
16 யாக்கோபின் சகோதரனாகிய யூதாவையும், பின்
பு தம்மைக் காட்டிக்கொடுத்த இஸ்காரியோத்
தாரானாகிய யூதாவையும் இப்படிப் பன்னிரண்டு
பேரையுந் தெரிந்துகொண்டு அவர்களை அப்போ
ஸ்தலரென்று பேர்சொல்லி,
17 பின்பு அவர்களுடனே கூட இறங்கிச் சமனான
ஒரு இடத்திலே நின்றார். அங்கே அவருடைய சீஷ
ரில் அநேகம்பேர் அவருடைய உபதேசத்தைக்கே
ட்டுத் தங்கள் வியாதிகளினின்று குணமாக்கப்படு
ம்படிக்கு யூதேயாநாட்டின் திசைகள் யாவற்றிலு
ம் எருசலேம் நகரத்திலுந் தீருசீதோன்பட்டினங்
களுள்ள கடலோரத்திலும் இருந்து அநேகசனங்க
ளும் வந்திருந்தார்கள்.
18 அசுத்தமான ஆவிகளால் வாதிக்கப்பட்டவர்களு
ங் கூடிவந்திருந்து ஆரோக்கியமடைந்தார்கள்.
19 வல்லமை அவரிலிருந்து புறப்பட்டு எல்லாரை

யுங் குணமாக்கினபடியினாலே சனங்கள் எல்லாரும்
அவரைத் தொடப்பார்த்தார்கள்.
அப்பொழுது அவர் தம்முடைய சீஷர்களை நோ 20
க்கிப் பார்த்துச் சொன்னதாவது, தரித்திரராகிய நீ
ங்கள் பரபரனுடைய இராச்சியத்தை உடையவர்க
ள் ஆகையால் நீங்கள் பாக்கியவான்கள்.
இப்பொழுது பசியாயிருக்கிற நீங்கள் (இனி) தி 21
ருத்தி அடைவீர்கள் ஆகையால் நீங்கள் பாக்கியவா
ன்கள். இப்பொழுது அழுகிற நீங்கள் (இனி) ந
கைப்பீர்கள் ஆகையால் நீங்கள் பாக்கியவான்கள்.
மனிதனுடைய குமாரனிமித்தமாகச் சனங்கள் 22
உங்களைப் பகைத்து உங்களை விலக்கி நிந்தைப்படு
த்தி உங்கள் நாமத்தைப் பொல்லாததென்று தள்
ளிப்போடும் பொழுது நீங்கள் பாக்கியராய் இரு
ப்பீர்கள்.
பரமண்டலத்திலே உங்கள் பலன் மிகுதியாயிரு 23
ப்பதால் அக்காலத்திலே நீங்கள் சந்தோஷப்பட்
டுக் களிகூருங்கள். அவர்களுடைய பிதாக்கள் தீ
ர்க்கதரிசிகளுக்கும் அப்படியே செய்தார்கள்.
ஐசுவரியவான்களாகிய நீங்கள் உங்கள நன்மைக 24
ளை அடைந்து தீர்ந்தபடியால் ஐயோ! உங்களுக்கு
வேதனைவரும்.
திருத்தியுள்ளவர்களாகிய நீங்கள் பசியை அடை 25
வீர்கள் ஆகையால் ஐயோ! உங்களுக்கு வேதனைவ
ரும். இப்பொழுது நகைக்கிற நீங்கள் (இனி) துக்
கப்படுவீர்கள் ஆகையால் ஐயோ! உங்களுக்கு வே
தனைவரும்.
எல்லா மனிதர்களும் உங்களைக் குறித்துப் புக 26
ழ்ச்சியாய்ப் பேசும்பொழுது ஐயோ! உங்களுக்கு
வேதனைவரும். அவர்களுடைய பிதாக்கள் கள்ள
த் தீர்க்கதரிசிகளுக்கும் அப்படியே செய்தார்கள்.

27 அன்றியும் (எனக்கு) செவிகொடுக்கிற உங்களுக்
கு நான் கட்டளையிடுகிறதாவது, உங்கள் சத்துருக்
களில் அன்புகூர்ந்து உங்களைப் பகைக்கிறவர்களு
க்கு நன்மை செய்து,
28 உங்களைச் சபிக்கிறவர்களை ஆசீர்வதித்து உங்களை
வருத்தப்படுத்துகிறவர்களுக்காகச் செபம்பண்ணு
ங்கள்.
29 உன் கன்னத்தில் அறைகிறவனுக்கு மறு கன்னத்
தையுங் காட்டு. உன் வஸ்திரத்தை எடுத்துக்கொ
ள்ளுகிறவனுக்கு உன் அங்கியையும் எடுத்துக்கொ
ள்ளத் தடைபண்ணாதிருப்பாயாக.
30 உன்னை வேண்டிக்கொள்ளுகிற யாவனுக்குங்
கொடுப்பாயாக. உன்னுடையதை ஒருவன் எடுத்
துக்கொண்டால் அவனிடத்தில் அதைத் திரும்பக்
கேளாதிருப்பாயாக.
31 சனங்கள் உங்களுக்குச் செய்யும்படி நீங்கள் வி
ரும்புகிறதெப்படியோ அப்படியே நீங்களும் அவ
ர்களுக்குச் செய்யக் கடவீர்கள்.
32 உங்களைச் சிநேகிக்கிறவர்களை (மாத்திரம்) நீங்க
ள் சிநேகித்தால் உங்களுக்கு என்ன பலன்வரும்?
பாவிகளுந் தங்களைச் சிநேகிக்கிறவர்களைச் சிநேகிக்
கிறார்களே. உங்களுக்கு நன்மை செய்கிறவர்க
ளுக்கு (மாத்திரம்) நீங்கள் நன்மை செய்தால் உங்
களுக்கு என்ன பலன்வரும்?
33 பாவிகளும் அப்படிச் செய்கிறார்களே. திரும்
பக் கொடுப்பார்களென்று நீங்கள் நம்பி அப்படிச்
செய்பவர்களுக்கு (மாத்திரம்) கடன்கொடுத்தால்
உங்களுக்கு என்ன பலன்வரும்?
34 பாவிகளுஞ் சரியாய்த் திரும்ப அடைந்துகொ
ள்ளும்படியாய் (மற்ற) பாவிகளுக்குக் கடன் கொ
டுக்கிறார்களே.

ஆகையால் உங்கள் சத்துருக்களைச் சிநேகித்து 35
நன்மை செய்து கைமாறெண்ணாமற் கடன்கொடு
ங்கள். அப்பொழுது உங்கள் பலன் மிகுதியாயிரு
க்கும். அல்லாமலும் நன்றியறியாதவர்கள் மே
லும் பொல்லாதவர்கள் மேலுந் தயவாயிருக்கிற உ
ன்னதமானவருக்குப் பிள்ளைகளாயிருப்பீர்கள்.
ஆகையால் உங்கள் பிதா இரக்கமுள்ளவராயிருக் 36
கிறதுபோல நீங்களும் இரக்கமுள்ளவர்களாய் இரு
ங்கள்.

மற்றவர்களைக் குற்றவாளிகளென்று எண்ணிக் 37
கொள்ளாதிருங்கள். அப்பொழுது நீங்களுங் கு
ற்றவாளிகளென்று எண்ணிக்கொள்ளப்படாதிருப்
பீர்கள். மற்றவர்களை ஆக்கினைக்குள்ளாகும்படி
தீராதிருங்கள். அப்பொழுது நீங்களும் ஆக்கினை
க்குள்ளாகும்படி தீர்க்கப்படாதிருப்பீர்கள். விடுத
லைபண்ணுங்கள் அப்பொழுது நீங்களும் விடுதலை
யாக்கப்படுவீர்கள்.
கொடுங்கள் அப்பொழுது உங்களுக்குங் கொடு 38
க்கப்படும். அமுக்கிக் குலுக்கிச் சரிந்து விழும்ப
டி நன்றாய் அளந்து உங்கள் மடியிலே போடுவார்க
ள். நீங்கள் அளக்கிற அளவு எதுவோ அதினாலே
உங்களுக்குத் திருப்ப அளக்கப்படுமே என்றார்.
பின்னும் அவர் உவமையாய் அவர்களுடனே 39
சொன்னது, குருடனுக்குக் குருடன் வழிகாட்ட
லாமா? இருவரும் பள்ளத்தில் விழுவார்களல்லவா?
சீஷன் தன் போதகருக்கு மேற்பட்டவனல்ல. 40
நிறைவாய்க் கற்றுக்கொண்டவனே தன் போதக
ரைப்போலிருப்பான்.

நீ உன்னுடைய கண்ணிலுள்ள உத்திரத்தை உ 41
ணராமல் உன் சகோதரனுடைய கண்ணிலுள்ள சி
ராயைப் பார்க்கிறதென்ன?

42 அல்லது நீ உன் கண்ணிலுள்ள உத்திரத்தைக் காணாமலிருக்க, நீ உன் சகோதரனை நோக்கிச் சகோதரனே, நான் உன் கண்ணிலுள்ள சிராயை எடுத்துப் போடுகிறேன். இடங்கொடு என்று எப்படிச் சொல்லலாம்? வஞ்சகனே, முன்பு நீ உன் கண்ணிலிருக்கிற உத்திரத்தை எடுத்துப்போடு. பின்பு உன் சகோதரனுடைய கண்ணிலுள்ள சிராயை எடுத்துப்போடும் வகையைத் தெளிவாக அறிவாய்

43 கெட்ட கனிகொடுக்கிறமரம் நல்லமரமல்ல. நல்ல கனிகொடுக்கிறமரங் கெட்டமரமல்ல

44 முட்செடிகளில் அத்திப்பழங்களைப் பறிக்கிறதும் இல்லை. நெரிஞ்சிச் செடியிலே திராட்சத்தைப் பறிக்கிறதுமில்லை. ஆகையால் எந்தமரமும் அதினுடைய கனியால் அறியப்படும்.

45 நல்ல மனிதன் தன் இருதயத்திலுள்ள நற் பொக்கிஷத்தில் நலமானதை எடுத்துக் காண்பிப்பான். பொல்லாத மனிதனும் தன் இருதயத்திலுள்ள பொல்லாத பொக்கிஷத்திற் பொல்லாததையே எடுத்துக் காண்பிப்பான். இருதயத்தின் பரிபூரணத்தினால் அவனுடைய வாய் பேசுமே.

46 அன்றியும் நான் கட்டளையிடுகிறவைகளை நீங்கள் செய்யாமலிருக்க, என்னை ஆண்டவரே, ஆண்டவரே, என்று என்னத்துக்கு அழைக்கிறீர்கள்?

47 என்னிடத்தில் வந்து என் வசனங்களைக் கேட்டு அவைகளின்படி செய்கிறவனை உங்களுக்குக் காண்பிப்பேன்.

48 அவன் எவனுக்கு ஒப்பாயிருக்கிறானென்றால் ஆழமாய்த் தோண்டிப் பாறையின்மேல் அஸ்திபாரம் போட்டு வீடுகட்டின மனிதனுக்கே ஒப்பாயிருக்கிறான். பெருவெள்ளம் உண்டானபொழுது நீரோட்டம் அந்த வீட்டில் மோதியும் அது கல்மலை

யின்மேல் அஸ்திபாரம் போட்டிருந்தபடியால் அ
தை அசைக்கக்கூடாமற்போயிற்று.
(என் வசனத்தைக்) கேட்டும் அதின்படி செய் 49
யாதவன் அஸ்திபாரமில்லாமற் பூமியின்மேல் வீடு
கட்டினவனுக்கு ஒப்பாயிருக்கிறான். வெள்ளம்
அதில் மோதினவுடனே அது விழுந்து மிகவும் இடி
ந்துபோயிற்றென்றார்.

---

## ௭. அதிகாரம்.

சனங்கள் கேட்கத்தக்கதாக அவர் தமது வாக்கி 1
யங்கள் யாவையுஞ் சொல்லி முடித்த பின்பு கப்ப
ர்நாகூமூருக்குப் போனார்.
அங்கே நூறு போர்ச்சேவகருக்குத் தலைவனாகி ௨
ய ஒருவனுக்குப் பிரியமான வேலைக்காரன் வியாதி
யினாலே மரணத்துக்கு ஏதுவாயிருந்தான்.
அந்தத் தலைவன் இயேசுவைக் குறித்துக்கேள் 3
விப்பட்டபொழுது அவர் வந்து தன் வேலைக்காரனை
க் குணமாக்கவேண்டுமென்று அவரை வேண்டிக்
கொள்ளும்படிக்கு யூதருடைய மூப்பரை அவரிட
த்தில் அனுப்பினான்.
அவர்கள் இயேசுவினிடத்திற்குப் போய் அவ 4
ரை மிகவும் வேண்டிக்கொண்டு பின்பு சொன்னது
அவன் நம்முடையதேசத்தாரில் அன்பாயிருந்து எ
ங்களுக்காக ஒரு செப ஆலயத்தையுங் கட்டினான்.
ஆகையால் உம்முடைய தயவுக்கு அவன் பாத்தி 5
ரனாயிருக்கிறான் என்றார்கள்.
இயேசுவானவர் அவர்களுடனே கூடச்சென்றா 6
ர். வீட்டுக்குச் சமீபமாய்ப் போனபொழுது அந்
தத்தலைவன் சிநேகிதரை நோக்கி (நீங்கள் அவரிட

த்திற்போய்) ஆண்டவரே, நீர் என் வீட்டுவாசலுக்
குட் பிரவேசிக்கிறதற்கு நான் பாத்திரனல்ல.
7 அதினாலே நான்தானே உம்மிடத்தில் வருகிறதற்
கும் என்னை அபாத்திரனென்று எண்ணினேன். ஆ
கையால் நீர் வருத்தப்படாதிரும்
8 அல்லாமலும் நான் அதிகாரத்துக்குக் கீழ்ப்ப
ட்டவனாயிருந்தும் எனக்குக் கீழிருக்கிற சேவகரில்
ஒருவனைப் போவென்னப் போகிறான். மற்றொரு
வனை வாவென்ன வருகிறான். என் வேலைக்காரனை
நோக்கி, இதைச்செய்யென்னச்செய்கிறான். ஆகை
யால் நீர் ஒரு வார்த்தையைமாத்திரஞ் சொன்னால்
என் வேலைக்காரன் சொஸ்தம் அடைவானென்று
சொல்லுங்களென்று அனுப்பினான்.
9 இயேசுவானவர் அதைக் கேட்டு அவனைக் குறித்
து ஆச்சரியப்பட்டுத் திரும்பிக்கொண்டு தமக்குப்
பின்செல்லுகிற சனங்களை நோக்கி இப்படிப்பட்
ட விசுவாசத்தை நான் இஸ்ரவேலருக்குள்ளுங் கா
ணவில்லையென்று உங்களுக்குச் சொல்லுகிறேனெ
ன்றார்.
10 அனுப்பப்பட்டவர்கள் திரும்ப வீட்டுக்கு வருகி
றபொழுது வியாதியாயிருந்த வேலைக்காரன் ஆ
ரோக்கியம் அடைந்திருக்கிறதைக் கண்டார்கள்.
11 மறுநாளிலே அவர் நாயீனென்னுமூருக்குப்
போனார். அவருடைய சீஷர் அநேகரும் மற்ற அ
நேக சனங்களும் அவருடனே கூடப்போனார்கள்.
12 அவர் ஊரின் வாசலுக்குச் சமீபமானபொ
ழுது ஒரு கைம்பெண்ணுடைய ஒரே குமாரன் இ
றந்துபோய் வெளியிலே கொண்டுவரப்பட்டான்.
ஊராரில் அநேகசனங்களும் அவளுடனே கூடவ
ந்தார்கள்.
13 கர்த்தர் அவளைப்பார்த்து அவள்மேல் உருக்க

மாய் இரங்கி நீ அழவேண்டாமென்று சொல்லிக்
கிட்டப்போகையிற் பாடையைச் சுமக்கிறவர்கள்
நின்றார்கள்.
உடனே அவர் அதைத் தொட்டு வாலிபனே, எ 14
ழுந்திரு என்று உனக்குச் சொல்லுகிறேனென்றார்.
அப்பொழுது மரித்தவன் எழுந்து உளுக்கார்ந் 15
து பேசத் தொடங்கினான். அவனை அவர் தாய்க்கு
ஒப்புக்கொடுத்தார்.
எல்லாரும் பயமடைந்து மகா தீர்க்கதரிசி நமக் 16
குள்ளே தோன்றியிருக்கிறாரென்றும் பராபரன் த
ம்முடைய சனங்களைச் சந்தித்துப் பார்த்தாரென்
றுஞ் சொல்லிப் பராபரனைப் புகழ்ந்தார்கள்.
அல்லாமலும் இந்தச் சங்கதி யூதேயாநாடு முழு 17
வதிலுஞ் சுற்றியிருக்கிற தேசங்கள் யாவற்றிலும் பி
ரசித்தமாயிற்று.
இவை எல்லாவற்றையும் யோவானுடைய சீஷர் 18
அவனுக்கு அறிவித்தார்கள்.
அப்பொழுது யோவான் தன் சீஷரில் இரண்டு 19
பேரை அழைத்து நீங்கள் இயேசுவினிடத்திற்போ
யி வருவாரென்று சொல்லப்பட்டவர் நீரா? அல்ல
து வேறொருவர் வரக்காத்திருக்கவேண்டுமா? என்
று கேளுங்களென்று சொல்லி அனுப்பினான்.
அந்தப்படி அவர்கள் அவரிடத்திற்போய் வரு 20
வாரென்று சொல்லப்பட்டவர் நீரா? அல்லது வே
றொருவர் வரக்காத்திருக்கவேண்டுமா? என்று கே
ட்கும்படிக்கு யோவான் ஸ்நானன் உங்களை உம்மி
டத்திற்கு அனுப்பினானென்றார்கள்.
அவ்வேளையிலே அவர் வியாதிகளையும் வேதனை 21
களையும் பொல்லாத ஆவிகளையுமுடைய அநேகம்
பேரைக் குணமாக்கிக்குருடர் அநேகருக்குப் பார்
வையை அருளினார்

22 அப்பொழுது இயேசுவானவர் அவர்களுக்குச்
சொன்னதாவது, குருடர் பார்வையை அடைகிறார்
கள் சப்பாணிகள் நடக்கிறார்கள். குஷ்டரோகிகள்
சுத்தமாகிறார்கள். செவிடர் கேட்கிறார்கள் மரித்
த்தோர் எழுப்பப்படுகிறார்கள். தரித்திரருக்குச்
சுவிசேஷம் அறிவிக்கப்பட்டுவருகின்றது. இப்ப
டி நீங்கள் பார்க்கிறவைகளையுங் கேட்கிறவைகளையு
ம் யோவானுக்குப் போய் அறிவியுங்கள்.
23 அல்லாமலும் என்னாலே இலச்சை அடையாமல்
இருக்கிறவன் பாக்கியவானென்றார்.
24 யோவானுடைய தூதர்கள் போன பின்பு அவர்
யோவானைக் குறித்துச் சனங்களுடனே சொன்ன
து காற்றினால் அசைக்கப்படுகிற நாணலையா நோ
க்கிப்பார்க்கும்படிக்கு வனாந்தரத்திற்குப் போனீ
ர்கள்?
25 அல்லது மெல்லிய வஸ்திரங்களைத் தரித்திருக்கி
ற மனிதனையா பார்க்கும்படிக்குப் புறப்பட்டீர்க
ள்? மகிமையான உடுப்போடுஞ் செல்வத்தோடும்
இருக்கிறவர்கள் அரசருடைய அரண்மனையிலிருக்கி
றார்களே.
26 அல்லது ஒரு தீர்க்கதரிசியையா பார்க்கும்படிக்
குப் புறப்பட்டீர்கள்? ஒரு தீர்க்கதரிசியிலும் அதி
கமானவனையே (பார்த்தீர்களென்று) உங்களுக்குச்
சொல்லுகிறேன்.
27 இதோ நான் என்னுடைய தூதனை உமக்கு மு
ன்பாக அனுப்புகிறேன் அவன் உமக்கு முன்பாக
நடந்து உமக்காக மார்க்கத்தைத் திருத்துவானென்
று ஒருவனைக்குறித்து எழுதியிருக்கின்றதே. அவன்
இவன்தான்.
28 ஆகையால் நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவ
து, ஸ்திரிகளிடத்தில் பிறந்தவர்களில் யோவான்ஸ்

நானவனிலும் பெரிய தீர்க்கதரிசி ஒருவனுமில்லை. ஆ
னாலும் பராபரனுடைய இராச்சியத்திலே சிறியவனா
னவன் அவனிலும் பெரியவனாய் இருக்கிறான்.

அன்றியும் (யோவானுடைய உபதேசத்தைக்) 29
கேட்ட சகல சனங்களும் ஆயக்காரரும் அவனாலே
ஞானஸ்நானத்தைப் பெற்றுப் பராபரன் நீதியா
ரென்று அறிக்கையிட்டார்கள்.

பரிசேயரும் நியாயசாஸ்திரிகளுமானவர்கள் மா 30
த்திரம் அவனாலே ஞானஸ்நானத்தைப் பெறாமல்
தங்களைக் குறித்துப் பராபரனுடைய ஆலோசனை
யைத் தள்ளினார்கள்.

அப்படியிருக்க, இந்தத் தலைமுறையின் மனித 31
ரை நான் யாருக்கு நிகர் சொல்வேன்? இவர்கள்
யாருக்கு ஒப்பாயிருக்கிறார்கள்?

சந்தையில் உட்கார்ந்து ஒருவரையொருவர் 32
நோக்கி உங்களுக்காக ஊதினோம். நீங்கள் கூத்
தாடவில்லை உங்களுக்காகப் புலம்பினோம். நீங்
கள் அழவில்லையென்று எதிர்க் கூப்பிடுகிற பிள்ளை
களுக்கு ஒப்பாயிருக்கிறார்கள்.

எப்படியெனில் யோவான் ஸ்நானன் வந்து அப் 33
பம் புசியாமலும் திராட்ச இரசங் குடியாமலும் இ
ருந்தான். அதினாலே அவன் பேய்கொண்டவனெ
ன்கிறீர்கள்.

மனிதனுடைய குமாரன் வந்து போசனபானம் 34
பண்ணுகிறான். அதினாலே இதோ போசனப்பிரி
யன் மதுபானப்பிரியன் ஆயக்காரருக்கும் பாவிக
ளுக்குஞ் சிநேகிதன் என்கிறீர்கள்.

ஆனாலும் ஞானமானது தன் பிள்ளைகள் எல்லரா 35
லும் நீதியாக்கப்படுகிறதென்றார்.

பரிசேயரிலொருவன் தன்னுடனே போசனம்ப 36
ண்ணும்படிக்கு அவரை வேண்டிக்கொண்டான்.

அந்தப்படி அவர் பரிசேயனுடைய வீட்டுக்குப்
போய்ப் பந்தியிருந்தார்.
37 அப்பொழுது பட்டினத்திலுள்ள பாவியாகிய ஒ
ரு ஸ்திரி அவர் பரிசேயனுடைய வீட்டிலே பந்தி
யிருக்கிறதை அறிந்து ஒரு பரணியிற் பரிமளதயில
ங் கொண்டுவந்து,
38 அவருடைய பாதங்களின் அருகே பின்னாக நின்
று அழுதுகொண்டு அவருடைய பாதங்களைக் கண்
ணீரினாலே நனைத்துத் தன் தலையின் மயிராலே தொ
டைத்து அவருடைய பாதங்களை முத்தஞ்செய்து
பரிமளதயிலத்தைப் பூசினாள்.
39 அவரை அழைத்த பரிசேயன் அதைக் கண்ட
பொழுது இவர் தீர்க்கதரிசியானால் தம்மைத் தொ
டுகிற ஸ்திரி இன்னாளென்றும் இப்படிப்பட்டவ
ளென்றும் அறிந்திருப்பார். இவள் பாவியாயிருக்
கிறாளே என்று தனக்குள்ளே எண்ணிக்கொண்டா
ன்.
40 இயேசுவானவர் அவனை நோக்கி சீமோனே, உ
னக்கு ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறேனென்றா
ர். போதகரே, சொல்லுமென்றான்.
41 (இயேசுவானவர் சொன்னது) கடன்காரன் ஒரு
வனுக்குக் கடனாளிகள் இரண்டுபேர் இருந்தார்கள்.
அவர்களில் ஒருவன் ஐந்நூறு வெள்ளிக்காசும் மற்
றொருவன் ஐம்பது வெள்ளிக்காசும் கொடுக்க வே
ண்டியிருந்தது.
42 அவர்கள் கொடுக்கிறதற்குத் திராணியில்லாதவர்
களான பொழுது இருவருக்கும் கடனை மன்னித்
தான். ஆகையால் அவர்களில் எவன் அவனிடத்தில்
அதிக அன்பாயிருப்பான் அதைச் சொல்லென்றார்.
43 சீமோன் மாறுத்தரமாகச் சொன்னது, அதிக
மான மன்னிப்பைப் பெற்றவனெவனோ அவனே

பென்று நினைக்கிறேனென்றான் அப்பொழுது அவர் நிதானமாய்த் தீர்த்தாயென்று சொல்லி,

பின்பு ஸ்திரியினிடத்திலே திரும்பிச் சீமோனுடனே சொன்னது, இந்த ஸ்திரியைப் பார்க்கிறாயா? நான் உனது வீட்டில் வந்தபொழுது நீ என் கால்களுக்காகத் தண்ணீரைத் தரவில்லை. இவள் கண்ணீரினாலே என் கால்களை நனைத்துத் தன் தலையின் மயிராலே தொடைத்தாள். 44

நீ என்னை முத்தஞ் செய்யவில்லை. இவள் இங்கே பிரவேசித்தது முதல் என் பாதங்களை ஓயாமல் முத்தஞ் செய்தாள் 45

நீ என் தலையில் எண்ணெயைப் பூசவில்லை. இவள் பரிமள தயிலத்தை என் பாதங்களில் பூசினாள். 46

ஆனதால் இவள் செய்த அநேக பாவங்கள் மன்னிக்கப்பட்டபடியினாலே மிகவும் அன்பாயிருக்கிறாளென்று உனக்குச் சொல்லுகிறேன். அல்லாமலும் கொஞ்சம் மன்னிக்கப்பெற்றவனெவனோ அவன் கொஞ்சம் அன்பாயிருக்கிறானென்று சொல்லி, 47

பின்பு அவளை நோக்கி உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டனவென்றார். 48

அப்பொழுது பந்தியிருந்தவர்கள் பாவங்களை மன்னிக்கிற இவன் யாவனென்று சொல்லிக்கொண்டார்கள். 49

அவர் (பின்னும்) ஸ்திரியை நோக்கி உன் விசுவாசம் உன்னை இரட்சித்தது. சமாதானத்தோடே போவென்றார். 50

---

௮. அதிகாரம்.

பின்பு அவர் பிரயாணமாய்ப் பட்டினங்கள்தோ 1

றும் ஊர்கள் தோறுந் திரிந்து பராபரனுடைய இ
ராச்சியத்தைச் சுவிசேஷமாய்ப் பிரசங்கம்பண்ணி
ஞர்.
2 பன்னிருவரும் பொல்லாத ஆவிகளினின்றும் வி
யாதிகளினின்றுங் குணமாக்கப்பட்ட சில ஸ்திரிக
ளும் அவருடனே கூடப் போனார்கள்.
3 ஏழு பசாசுகளினின்றும் நீககப்பட்ட மகதலே
னாள் என்னப்பட்ட மரியாளும் ஏரோதேயின்
காரியக்காரனாகிய கூசாவின் மனைவியாகிய யோ
வன்னாளுஞ் சூசன்னாளுந் தங்கள் ஆஸ்திகளால் அ
வருக்கு ஊழியஞ் செய்துகொண்டு வருகிற மற்
ற அநேக ஸ்திரிகளும் அவருடனே இருந்தார்
கள்.
4 பட்டினங்களிலிருந்து மிகுந்த சனங்கள் வந்து
அவரிடத்திற் கூடியிருக்கிற பொழுது அவர் உவ
மையாய்ச் சொன்னது,
5 விதைக்கிறவன் தன் விதையை விதைக்கப் புறப்
பட்டான். அவன் விதைக்கையிற் சில விதை வழி
யருகே விழுந்து மிதிக்கப்பட்டது. ஆகா
சத்தின் பறவைகளும் வந்து அதைப் பட்சித்தன.
6 சில விதை கற்பாறையின் மேல் விழுந்தது. அ
து முளைத்த பின் ஈரமில்லாததினாலே அது உலர்
ந்துபோயிற்று.
7 சில விதை முட்செடிகளுள்ள இடத்திலே விழு
ந்தது. முட்செடிகள் கூட வளர்ந்து அதை நெ
ருக்கிப்போட்டன.
8 சில விதை நல்ல நிலத்திலே விழுந்து முளைத்து
நூறுமடங்காய்ப் பலன் தந்ததென்று சொல்லிப்
பின்பு கேட்கிறதற்குக் காதுள்ளவன் கேட்கக்கட
வனென்று கூப்பிட்டார்.
9 அப்பொழுது அவருடைய சீஷர் அவரை நோ

க்கி இந்த உவமையின் கருத்து என்னவென்றுகே
ட்டார்கள்.

அவர் சொன்னது, பராபரனுடைய இராச்சியத் 10
தின் இரகசியங்களை அறியும்படிக்கு நீங்கள் அருள்
பெற்றவர்கள். மற்றவர்கள் கண்டுங் காணாமலுங்
கேட்டும் உணராமலும் இருக்கத்தக்கதாக (அவை
கள்) உவமைகளாய் அவர்களுக்குச் சொல்லப்படு
கின்றன.

அந்த உவமையின் கருத்தாவது, விதையானது 11
பராபரனுடைய வசனமே.

(விதை விழுந்த) வழியானது (அந்த வசனத்தை) 12
கேட்கிறபொழுது விசுவாசியாமலும் இரட்சிக்கப்
படாமலும் இருக்கும்படிக்குத் தங்கள் இருதயத்தி
லிருந்து அவ்வசனம் பசாசினாலே எடுக்கப்படுகிற
வர்களேயாம்.

(விதை விழுந்த) கற்பாறையானது (அவ்வசன 13
த்தைக்) கேட்கிறபொழுது சந்தோஷத்தோடே ஏ
ற்றுக்கொண்டு பின்பு அது தங்களுக்குள்ளே வேர்
கொள்ளும்படி செய்யாமற் சிலகாலம் (மாத்திரம்)
விசுவாசித்துச் சோதனைகாலத்திலே வழுவிப்போ
கிறவர்களே ஆம்

(விதைவிழுந்த) முட்செடிகளுள்ள நிலமானது 14
தேவவசனத்தைக் கேட்கிறவர்களாயிருந்தும் நிறை
த்தபலனைக் கொடாதபடிக்குக் கவலைகளும் ஐசுவ
ரியமுஞ் சீவனத்தின் செல்வமு முள்ளவர்களாய் ந
டந்து அவைகளினாலே அமுந்த நெருக்கிப் போடுகி
றவர்களே ஆம்.

(விதைவிழுந்த) நல்ல நிலமானது அவ்வசனத் 15
தைக் கேட்டு நன்றும் உண்மையுமான இருதயத்தி
லே அதைக் காத்துக்கொண்டு இடைவிடாமற் பல
ன் கொடுக்கிறவர்களே ஆம்.

16 ஒருவனும் விளக்கைக் கொளுத்தி அதை ஒரு பா
த்திரத்தினாலே மூடவுங் கட்டிலின் கீழே வைக்கவு
ம் மாட்டான். உள்ளே வருகிறவர்கள் வெளிச்சங்கா
ணும்படிக்கு அதைத் தண்டின்மேலே வைப்பான்.
17 அந்தப்படி வெளியரங்கமாகாத அந்தரங்கமுமி
ல்லை. அறியப்பட்டு வெளிக்குவாராத மறைபொ
ருளுமில்லை
18 ஆதலால் நீங்கள் கேட்கிறவிதத்தைக் குறித்து எ
ச்சரிக்கையாயிருங்கள். எவனத்திருவென்னில் உள்
ளவனுக்குக் கொடுக்கப்படும். இல்லாதவன் தனக்
கு உண்டென்று நினைக்கிற பொருளும் அவனிடத்
திலிருந்து எடுத்துக்கொள்ளப்படுமென்றார்.
19 அப்பொழுது அவருடைய தாயுஞ் சகோதரரு
ம் அவரிடத்திற்குப் போகையிற் சனக்கூட்டத்தினி
மித்தம் அவர்கள் அவரைச் சேருகிறதற்கு இடமி
ல்லை.
20 அப்பொழுது சிலர் அவரை நோக்கி உம்முடை
ய தாயுஞ் சகோதரரும் உம்மைப் பார்க்கவேண்டு
மென்று வெளியே நிற்கிறார்களென்று அறிவித்தா
ர்கள்.
21 அவர்களுக்கு மாறுத்தரமாக அவர் சொன்னது,
பராபரனுடைய வசனத்தைக் கேட்டு அதின்படி
செய்கிறவர்களே என் தாயுமாய் என் சகோதரரு
மாயிருக்கிறார்களென்றார்.
22 ஒருநாளிலே அவர் தம்முடைய சீஷரோடேகூ
ட ஒரு படவிலேறி அவர்களை நோக்கிக் கடலின் அ
க்கரைக்குப் போகக் கடவோமென்றார். அந்தப்
படி கரையை விட்டுப் போனார்கள்.
23 அவர்கள் படவை நடத்துகையில் அவர் நித்திரை
பண்ணினார். அப்பொழுது படவு சலத்தினாலே
நிரப்பப்படவும் அவர்களுக்கு மோசம் வரவுந் தக்

சுதாகக் கடலிற் சுழல்காற்றுண்டாயிற்று.

உடனே அவர்கள் சேர்ந்து ஆண்டவரே, ஆண் 24
டவரே, நாங் கெட்டுப்போகிறோமே என்று (கூப்
பிட்டு) அவரை எழுப்பினார்கள். அப்பொழுது அ
வர் எழுந்து காற்றையுஞ் சலத்தின் உக்கிரத்தையு
ம் அதட்டினார். உடனே அவைகள் நின்றுபோக
அமைதலுண்டாயிற்று.

பின்பு அவர் அவர்களை நோக்கி உங்கள் விசுவாச 25
ம் எங்கே என்றார். அவர்கள் பயந்து ஆச்சரியப்
பட்டு இவர் எப்படிப்பட்டவரோ! காற்றுக்களு
க்குஞ் சலத்திற்குங் கட்டளையிடுகிறாரே. அவைக
ளும் இவருக்குக் கீழ்ப்படிகின்றனவே என்று ஒரு
வரோடொருவர் சொல்லிக்கொண்டார்கள்.

பின்பு கலிலேயா நாட்டுக்கு எதிரான கதரேனர் 26
தேசத்திலே சேர்ந்தார்கள்.

அவர் அக்கரையில் இறங்கினபொழுது அநேக 27
நாளாய்ப் பசாசுக்கள் பிடித்தவனுமாய் வஸ்திரந்த
ரியாதவனுமாய் வீட்டிலே தங்காமற் பிரேதக் கல்
லறைகளிலே தங்கினவனுமாயிருந்த அப்பட்டினத்
து மனிதனொருவன் அவருக்கு எதிராகவந்தான்.
அநேகந்தரம் அந்த அசுத்த ஆவி அவனை அலக்கழி
த்து வந்தது.

அல்லாமலும் அவன் சங்கிலிகளாலும் விலங்குக 28
ளாலுங் கட்டப்பட்டுக் காவல்பண்ணப்பட்டிருந்
தும் அவன் விலங்குகளைத் தறிதுப்போட்டுப் ப
சாசினால் வனாந்தரங்களுக்குத் துரத்தப்பட்டான்.
ஆதலால் இயேசுவானவர் அந்த ஆவி அவனைவிட்டுப்
போகும்படிக்குக் கட்டளையிட்டார்.

ஆனபடியினாலே அவன் இயேசுவானவரைக் கண் 29
டபொழுது கூக்குரலிட்டு அவருக்கு முன்பாக வி
ழுந்து இயேசுவே, உன்னதமான பராபரனுடைய

குமாரனே, எனக்கும் உமக்கும் என்ன! என்னை
வேதனைப்படுத்தாதபடிக்கு உம்மை வேண்டிக்
கொள்ளுகிறேனென்றான்.
30 அப்பொழுது இயேசுவானவர் அவனை நோக்கி
உன் பேரென்னவென்று கேட்டார். அதற்கு அ
வன் இலேகியோனென்று சொன்னான். * அநேக
ம் பசாசுக்கள் அவனுக்குட் புகுந்தபடியால் அந்த
ப்பேர் அவனுக்கு உண்டாயிற்று.
31 அல்லாமலுந் தங்களைப் பாதாளத்திற்குப் போ
கும்படி கட்டளையிடாதபடிக்கு அவைகள் அவரை
வேண்டிக்கொண்டன.
32 அப்பொழுது அவ்விடத்திலே அநேகம் பன்றி
கள் கூட்டமாய் மலையிலே மேய்ந்துகொண்டிருந்
தன. அவைகள் அந்தப் பன்றிகளுக்குட் பிரவேசி
க்கும்படி உத்தரவு கொடுக்க வேண்டுமென்று அ
வரை வேண்டிக்கொண்டன. அப்படியே அவைக
ளுக்கு உத்தரவு கொடுத்தார்.
33 உடனே பசாசுக்கள் அந்த மனிதனைவிட்டு நீங்கி
ப் பன்றிகளுக்குட் புகுந்தன. அப்பொழுது அ
ந்தப் பன்றிக்கூட்டம் உயர்ந்தமேட்டிலிருந்து கட
லிலே பாய்ந்து அமிழ்ந்து போயிற்று.
34 அவைகளை மேய்த்தவர்கள் அதைக்கண்டு ஓடிப்
போய்ப் பட்டினத்திலும் வெளிப்புறங்களிலும் அ
றிவித்தார்கள்.
35 அப்படி நடந்ததைச் சனங்கள் பார்க்கும்படிக்
குப் புறப்பட்டு இயேசுவினிடத்திற் போய் பசா
சுக்கள் விட்டுப்போன மனிதன் இயேசுவினுடைய
பாதங்கள் அருகே வஸ்திரந்தரித்தவனாய் உளுக்கா
ர்ந்து புத்தியடைந்திருக்கிறதைக் கண்டு பயப்பட்
டார்கள்.
36 பசாசுக்கள் பிடித்திருந்தவன் இரட்சிக்கப்பட்ட

வகைகளைக் கண்டவர்களும் அதை அவர்களுக்கு அ
றிவித்தார்கள்.

அப்பொழுது கதரேனருடைய சுற்றுத் தேசத் 37
தின் திரளான சனங்களெல்லாரும் மிகுந்த பயம்
அடைந்தவர்களான படியினாலே தங்களைவிட்டுப்
போகும்படிக்கு அவரை வேண்டிக்கொண்டார்க
ள். அந்தப்படி அவர் படவிலேறித் திரும்பினார்.

பசாசுக்கள் விட்டுப்போன மனிதன் அவருட 38
னே கூடப் போயிருக்கும்படிக்கு அவரிடத்தில் உ
த்தரவு கேட்டுக்கொண்டான்.

இயேசுவானவர் அவனை நோக்கி நீ உன் வீட்டுக் 39
குத் திரும்பிப்போய்ப் பராபரன் உனக்குச் செய்
த விசேஷங்களை அறிவிப்பாயாகவென்று சொல்லி
அனுப்பிவிட்டார். அந்தப்படி அவன் போய்த் த
னக்கு இயேசுவானவர் செய்த விசேஷங்களைப் ப
ட்டிணத்தில் எங்கும் பிரசித்தம்பண்ணினான்.

பின்பு இயேசுவானவர் திரும்பி வந்தபொழுது 40
அவர் வரக் காத்துக்கொண்டிருந்த சனங்களெல்
லாரும் அவரை உபசாரஞ் செய்தார்கள்.

அப்பொழுது செப ஆலயத்தலைவனான யவீரு 41
என்பவன் வந்து இயேசுவின் பாதங்களிடத்தில் வி
ழுந்து தனக்கு உண்டான பன்னிரண்டு வயதுள்ள
ஒரே குமாரத்தி மரணத்திற்கு ஏதுவாயிருந்தபடி
யினாலே,

தன் வீட்டிலே வரும்படிக்கு அவரை வேண்டிக் 42
கொண்டான். அவர் அவனுடனே கூடப் போகை
யிற் சனங்கள் அவரை நெருக்கினார்கள்.

அப்பொழுது பன்னிரண்டு வருஷம் பெரும்பா 43
டுபட்டுத் தன் பொருட்கள் யாவையும் பரிகாரிகளு
க்குச் செலவழித்து ஒருவராலுஞ் சுகமடையாத ஒ
ரு ஸ்திரி (அவருக்குப்) பின்னாலே சேர்ந்து,

44 அவருடைய வஸ்திரத்தின் ஓரத்தைத் தொட்டா
ள். உடனே அவளுடைய இரத்த ஊறல் நின்று
போயிற்று.
45 அப்பொழுது இயேசுவானவர் என்னைத் தொட்
டவர் யாவரென்றார். நாங்கள் அறியோமென்று எ
ல்லாருஞ் சொன்னபொழுது பேதுருவும் அவரோ
டிருந்தவர்களும் அவரை நோக்கி ஐயரே, சனங்க
ள் உம்மை நெருக்கி உரசிக்கொண்டிருக்கிறார்களே
அப்படியிருக்க என்னைத் தொட்டவர் யாரென்று
எப்படிக்கேட்கிறீரென்றார்கள்!
46 இயேசுவானவர் சொன்னது, என்னிலிருந்து ப
லம் புறப்பட்டதை அறிந்திருக்கிறேன். ஆகையா
ல் ஒருவர் என்னைத் தொட்டதுண்டென்றார்.
47 அப்பொழுது ஸ்திரியானவள் மறைந்திருக்கக்
கூடாதென்று கண்டு நடுங்கி வந்து அவர் முன்பா
கச் சாஷ்டாங்கமாய் வணங்கித் தான் அவரைத்
தொட்டகாரணத்தையும் உடனே குணம் அடைந்
ததையும் எல்லாச் சனங்களுக்கு முன்பாக அவருக்
கு அறிவித்தாள்.
48 அவர் அவர்களுடனே சொன்னது, மகளே, சந்
தோஷமாயிரு. உன் விசுவாசம் உன்னை இரட்சித்
தது. சமாதானத்தோடே போவென்றார்.
49 அவர் அப்படிப் பேசிக்கொள்ளுகையில் செப
ஆலயத்தலைவனுடைய வீட்டிலிருந்து ஒருவன் வந்
து அவனை நோக்கி உம்முடைய குமாரத்தி இறந்து
போனாள். போதகரை (இனி) வருத்தப்படுத்தாதி
ருமென்றான்.
50 இயேசுவானவர் அதைக்கேட்டு யாவீருஎன்பவ
னை நோக்கி நீர் பயப்படாமல் விசுவாசமாயிரும்.
அப்பொழுது இரட்சிக்கப்படுவாளென்றார்.
51 பின்பு அவர் வீட்டிலே சேர்ந்தபொழுது பே

ருவையும் யாக்கோபையும் யோவானையும் பெண்ணுடைய தகப்பனையுந் தாயையுந் தவிர மற்றொருவரும் உள்ளே பிரவேசிக்கிறதற்கு இடங்கொடாமல்,

எல்லாரும் அவளைக் குறித்து அழுது துக்கங் 52
கொண்டாடுகிறதைக் (கண்டு) நீங்கள் அழவேண்டாம். அவள் இறந்துபோகவில்லை. நித்திரைபண்ணுகிறாள் என்றார்.

அவள் இறந்துபோனாளென்று அவர்கள் அறிந் 53
து அவரைக் குறித்து நகைத்தார்கள்

பின்பு அவர் எல்லாரையும் வெளியே போகப்ப 54
ண்ணி அவளுடைய கையைப் பிடித்துப் பிள்ளையே எழுந்திருவென்று கூப்பிட்டார்.

உடனே அவளுடைய ஆவி திரும்பி வந்தபடியா 55
ல் அவள் எழுந்திருந்தாள். அவளுக்குச் சாப்பாடு கொடுக்கும்படிக்குக் கட்டளையிட்டார்.

அவளுடைய தாய் தகப்பன்மார் பிரமித்தார்கள். 56
அப்பொழுது நடந்ததை ஒருவருக்குஞ் சொல்லாதபடிக்கு அவர்களுக்குக் கட்டளையிட்டார்.

---

## ௯. அதிகாரம்.

பின்பு அவர் தம்முடைய பன்னிரண்டு சீஷரைக் 1
கூடிவரவழைத்து எந்தப் பசாசுக்களையும் வியாதிகளையும் நீக்குவதற்கு வல்லமையையும் அதிகாரத்தையும் அவர்களுக்குக் கொடுத்து,

பராபரனுடைய இராச்சியத்தைக் குறித்துப் பி 2
ரசங்கிக்கும்படிக்கும் பிணியாளிகளைச் சொஸ்தமாக்கும்படிக்கும் அவர்களை அனுப்பி,

அவர்களுடனே சொன்னது, வழிக்குத் தடிகளையா 3
வது பையையாவது அப்பத்தையாவது காசையா

வது எடுத்துக்கொள்ளாதிருங்கள். இரண்டு அங்கி
களையுங் கொண்டுபோகவேண்டாம்.
4 நீங்கள் பிரவேசிக்கும் வீடு எதுவோ அதிலே நீங்
கள் புறப்படுகிறவரைக்குந் தங்குங்கள்.
5 உங்களை ஏற்றுக்கொள்ளாதவர்கள் எவர்களோ
அவர்களுடைய பட்டினத்தை விட்டுப் புறப்படுகி
றபொழுது அவர்களுக்கு விரோதமான சாட்சிக்கா
க உங்கள் கால்களின் தூளை உதறிப்போடுங்களெ
ன்று சொல்லி அனுப்பினார்.
6 அந்தப்படி அவர்கள் புறப்பட்டுக் கிராமங்கள்
தோறும் போய்த் திரிந்து சுவிசேஷத்தைப் பிரச
ங்கித்துப் (பிணியாளிகளைக்) குணமாக்கினார்கள்.
7 அககாலத்திலே காற்பங்கு தேசாதிபதியாகிய ஏ
ரோதே அவராலே செய்யப்பட்ட யாவையுங் கே
ள்விப்பட்டுச் சிலர் யோவான் மரித்தோரிலிருந்து
எழுந்தானென்றும்,
8 சிலர் எலியா தோன்றினாரென்றுஞ் சிலர் பழை
யதீர்க்கதரிசிகளிலொருவன் உயிர் அடைந்து எழுந்
தானென்றுஞ்சொல்லுபடியினாலே கலக்கம் அடை
ந்து,
9 யோவானை நான் சிரச்சேதம்பண்ணினேன். இ
ப்படிப்பட்டவைகளைச் செய்ய நான் கேள்விப்படு
கிற இவன் யாவனென்று ஏரோதே சொல்லி அவ
னைப்பார்க்க விரும்பினான்.
10 அப்போஸ்தலர்கள் திரும்பிவந்து தாங்கள்செய்
த யாவையும் அவருக்கு விவரித்துச்சொன்னார்கள்.
அப்பொழுது அவர் அவர்களைக் கூட்டிக்கொண்டு
தனித்திருக்கும்படிக்குப் பெத்சாயிதா என்னும்ப
ட்டினத்தைச் சேர்ந்த வனாந்தரத்திற்குப் போனார்.
11 சனங்கள் அதை அறிந்து அவருக்குப் பின்போ
னார்கள். அவர்களை அவர் அங்கிகரித்துக்கொண்டு

பராபரனுடைய இராச்சியத்தைக் குறித்து அவர்க
ளுடனே பேசிச் சொஸ்தம் அடையவேண்டுமென்
று இருந்தவர்களைச் சொஸ்தமாக்கினர்.
சாயந்திரத்திலே பன்னிருவருஞ் சேர்ந்து அவ 12
ரை நோக்கி இங்கே வனாந்தரமான இடத்திலே இ
ருக்கிறோம். ஆகையாற் சனங்கள் சுற்றியிருக்கிற
பட்டினங்களுக்கும் ஊர்களுக்கும் போய் விடாய்
தீர்ந்து போசனஞ் சம்பாதித்துக் கொள்ளும்படி
க்கு அவர்களை அனுப்பிவிட வேண்டுமென்றார்கள்.
அதற்கு அவர் நீங்களே அவர்களுக்குச்சாப்பாடு 13
கொடுங்களென்றார். ஏறக்குறைய ஐயாயிரம்புரு
ஷர் இருந்தபடியினாலே,
அவர்கள் சொன்னது, ஐந்து அப்பமும் இரண் 14
டு மீனுமாத்திரம் எங்களிடத்திலுண்டு. ஆகையால்
நாங்கள் போய் இந்தச் சனங்கள் எல்லாருக்காகவு
ம் போசனத்திற்கு எத்தவைகளை வாங்கிக்கொள்ளா
விட்டால் (திருத்தியுண்டாக மாட்டாதே) என்றார்
கள்.
அவர் தம்முடைய சீஷருடனே சொன்னது, இ 15
வர்கள் ஐம்பதைம்பதாகப் பந்தியில் உளுக்காரும்
படிசெய்யுங்களென்றார். அவர்கள் அப்படியே செ
ய்தார்கள். எல்லாரும் உளுக்கார்ந்தார்கள்.
அப்பொழுது அவர் அவ்வைந்து அப்பங்களையு 16
ம் இரண்டு மீன்களையும் எடுத்து வானத்தை அண்
ணார்ந்துபார்த்து அவைகளை ஆசீர்வதித்துப் பிட்டுச்
சனங்களின் முன் வைக்கும்படிக்குச் சீஷருக்குக்
கொடுத்தார்.
எல்லாரும் புசித்து திருத்தியடைந்தார்கள். அ 17
ல்லாமலும் பன்னிரண்டு கூடை நிறையச் சேஷி
மானவைகளும் எடுத்துக்கொள்ளப்பட்டன.
பின்பு ஒருநாள் அவர் தம்முடைய சீஷர் கூடஇ 18

ருக்கத் தனித்துச் செபம்பண்ணினபொழுது அவ
ர் அவர்களை நோக்கி என்னைக் குறித்துச் சனங்கள்
என்னசொல்லுகிறார்களென்று கேட்டார்.
19 அவர்கள் மாறுத்தரமாகச் சொன்னது, சிலர் உ
ம்மை யோவாஸ்நானனென்றுஞ் சிலர் எலியாவெ
ன்றுஞ் சிலர் பழைய தீர்க்கதரிசிகளிலொருவன் உ
யிரடைந்து எழுந்தாரென்றுஞ் சொல்லுகிறார்களெ
ன்றார்கள்.
20 அவர் சொன்னது, நீங்கள் என்னைக் குறித்து எ
ன்ன சொல்லுகிறீர்களென்றார். அதற்குப் பேது
ரு நீர் பராபரனுடைய கிறிஸ்து என்றான்.
21 அப்பொழுது அவர்கள் அதை ஒருவனுக்குஞ்
சொல்லாதபடிக்கு அவர்களுக்குக் கெட்டியாய்க்
கட்டளையிட்டார்.
22 அன்றியும் அவர் சொன்னது மனிதனுடைய கு
மாரன் அநேகம் பாடுபடவும் மூப்பராலும்பிரதா
ன ஆசாரியராலும் வேதபாரகராலுந் தள்ளப்பட
வுங் கொல்லப்படவும் பின்பு மூன்றாம் நாளிலே உ
யிரோடெழுந்திருக்கவும் வேண்டுமென்றார்.
23 அல்லாமலும அவர் எல்லாருடனேயுஞ் சொன்
னது, ஒருவன் எனக்குப் பின்செல்ல மனதாயிருந்
தால் அவன் தன்னைத்தான் வெறுத்துத் தன் சிலு
வைமரத்தைத் தினந்தோறும் எடுத்துக்கொண்டு எ
ன்னைப் பின்பற்றக்கடவன்.
24 என்னத்தினாலெனில் தன் சீவனை இரட்சித்துக்
கொள்ள விரும்புகிறவன் அதை இழந்துபோவான்.
என்னிமித்தம் தன் சீவனை இழந்துபோகிறவன் அ
தை இரட்சித்துக்கொள்வான்.
25 அன்றியும் மனிதனானவன் உலகத்தையெல்லாஞ்
சம்பாதித்துக்கொண்டு தன்னைத்தான் அழித்தால்
அல்லது சேதப்படுத்தினால் அவனுக்கு என்ன

இலாபமுண்டாயிருக்கும்?
அன்றியும் என்னைக்குறித்தும் என் வசனங்களைக் 26
குறித்தும் வெட்கப்படுகிறவனெவனோ அவனைக்
குறித்துமனிதனுடைய குமாரன் தம்முடைய மகி
மையோடும் பிதாவானவருடைய மகிமையோடும்
பரிசுத்த தூதருடைய மகிமையோடும் வரும்பொ
ழுது வெட்கமடைவான்.
இங்கே நிற்கிறவர்களிற் சிலர் பராபரனுடைய 27
ஆளுகையைக் காணுமளவும் மரணத்தை அடைவதி
ல்லையென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகி
றேனென்றார்.
இந்த வசனங்களை அவர் சொல்லி ஏறக்குறைய 28
எட்டுநாளான பொழுது அவர் பேதுருவையும்
யோவானையும் யாக்கோபையும் கூட்டிக்கொண்டு
செபம்பண்ணும்படிக்கு ஒரு மலையிலேறினார்.
அவர் செபம்பண்ணுகையில் அவருடைய முக 29
ரூபம் மாறிற்று. அல்லாமலும் அவருடைய வஸ்
திரம் வெண்மையாகப் பிரகாசங் கொடுத்தது.
அன்றியும் மோசே எலியா இவ்விரண்டு பேரு 30
ம் மகிமையோடே காணப்பட்டு அவருடனே பேசி,
அவர் எருசலேமிலே நிறைவேற்றும் மரணத்தை 31
க் குறித்துச் சம்பாஷிணை பண்ணிக்கொண்டார்கள்.
பேதுருவும அவனோடிருந்தவர்களுங் கனமான 32
நித்திரை அடைந்து விழித்துக்கொண்ட பொழுது
அவருடைய மகிமையையும் அவரிடத்தில் நின்ற
அவ்விரண்டு பேரையுங் கண்டார்கள்.
அன்றியுந் அவ்விருவரும அவரைவிட்டுப் பிரிந் 33
துபோகையிற் பேதுரு இயேசுவை நோக்கி ஐய
ரே, நாம் இங்கே இருக்கிறது நல்லது. நாங்கள்
உமக்கும் மோசேயுக்கும் எலியாவுக்கும் ஒவ்வொரு
குடிலாக மூன்று குடில்களை உண்டாக்குவோமெ

ன்று தகுதியான யோசனைபண்ணாமற் சொன்னான்.
34 அப்படி அவன் செல்லுகிற பொழுது ஒரு மே
கம் வந்து அவர்கள் மேலே நிழலிட்டது அவ்விரு
வரும் மேகத்துக்குட் பிரவேசிக்கையிற் சீஷர் பய
ந்தார்கள்.
35 அப்பொழுது இவர் (எனக்கு) அன்பாயிருக்கிற
என்னுடைய குமாரன். இவருக்குச் செவிகொடுங்க
ளென்று மேகத்தில் இருந்து சத்தமுண்டாயிற்று.
36 அந்தச் சத்தமுண்டாகையால் இயேசுவானவர்
மாத்திரமிருந்தார். பின்பு அவர்கள் கண்டவைகளி
ல் ஒன்றையும் அக்காலத்திலே ஒருவருக்கும் அறி
விக்காமல் மவுனமாயிருந்தார்கள்.
37 மறுநாளிலே அவர்கள் மலையில் இருந்து இறங்கி
ன பொழுது அநேக சனங்கள் அவருக்கு எதிர்கொ
ண்டு வந்தார்கள்.
38 அல்லாமலும் அவர்களிலொருவன் கூப்பிட்டுச்
சொன்னது போதகரே, நீர் என் மகனை நோக்கி
ப் பார்க்கும்படிக்கு உம்மை வேண்டிக்கொள்ளு
கிறேன். அவன் எனக்கு ஒரே பிள்ளையானவன்.
39 ஒரு ஆவி அவனைப்பிடிக்கிறது. உடனே அலறு
கிறான். அவனை நுரைதள்ள அலைக்கழித்து அவனை
க் கசக்கின பின்பும் அவனை விட்டு நீங்குகிறது அரி
தாயிருக்கிறது.
40 அதைத் துரத்தும்படிக்கு உம்முடைய சீஷரை
வேண்டிக்கொண்டேன். அவர்களுக்கு அப்படிச்
செய்யத் திராணி இல்லையென்றான்.
41 இயேசுவானவர் மாறுத்தரமாகச் சொன்னது, வி
சுவாசமில்லாத மாறுபாடான சந்ததியே, எதுவரை
க்கும் உங்களிடத்திலிருந்து உங்களிற் பொறுமை
யாய் இருப்பேனென்று சொல்லிப் பின்பு உன் மக
னை இங்கே கொண்டுவாவென்றார்.

அவன் வருகிறபொழுது பசாசு அவனை தொறக் 42
கி அலக்கழித்தது. இயேசுவானவர் அந்த அசுத்
த ஆவியை அதட்டிப் பிள்ளையைக் குணமாக்கி அவ
னைத் தகப்பனுக்கு ஒப்புக்கொடுத்தார்.

(அதைக் கண்ட) எல்லாரும் பராபரனுடைய ம 43
கத்துவத்தைக் குறித்துப் பிரமித்தார்கள். இயே
சுவானவர் செய்த எல்லாவற்றையுங்குறித்து யாவரு
ம் ஆச்சரியப்படுகிற பொழுது அவர் தம்முடைய
சீஷரை நோக்கிச் சொன்னது,

மனிதனுடைய குமாரன் மனிதர் கைகளில் ஒப் 44
புக்கொடுக்கப்படுவான். இந்த வசனங்களை நீங்கள்
நன்றாய்க் கேட்டுக் காத்துக்கொள்ளக் கடவீர்களெ
ன்றார்.

அவர்கள் அந்த வசனங்களின் கருத்தை அறியா 45
மல் இருந்தார்கள். அது அவர்களுக்குத் தோன்
றாதபடிக்கு மறைபொருளாயிருந்தது அல்லாம
லும் அவர்கள் அந்த வசனங்களைக் குறித்து அவரி
டத்தில் விசாரித்துக்கொள்ளுகிறதற்குப் பயப்பட்
டார்கள்.

(ஒருநாள்) அவர்கள் தங்களில் எவன் பெரியவனா 46
ய் இருப்பானென்று யோசனைபண்ணிக்கொண்டா
ர்கள்.

அவர்களுடைய இருதயத்தின் யோசனையை இ 47
யேசுவானவர் அறிந்து ஒரு பிள்ளையை எடுத்து அ
தைத் தமக்கு அருகே நிறுத்தி,

இந்தச் சிறு பிள்ளையை என் நாமத்தினிமித்தம் 43
ஏற்றுக்கொள்ளுகிறவன் என்னை ஏற்றுக்கொள்ளு
கிறான். என்னை ஏற்றுக்கொள்ளுகிறவன் என்னை அ
னுப்பினவரை ஏற்றுக்கொள்ளுகிறான். ஆதலால் உ
ங்கள் எல்லாரிலுஞ் சிறியவனாயிருக்கிறவனே பெரி
யவனாயிருப்பானென்றார்.

49 அப்பொழுது யோவான் (அவரை நோக்கி,) ஐய
ரே, உம்முடைய நாமத்தினாலே பசாசுகளைத் துர
த்துகிற ஒருவனை நாங்கள் கண்டு அவன் எங்களுட
னே கூட (உமக்கு) பின்செல்லாதபடியினாலே அ
வனுக்குத் தடைபண்ணினோமென்றான்.

50 அதற்கு இயேசுவானவர் சொன்னது நமக்குவி
ரோதமாயிராதவன் நம்முடைய பங்கிலிருக்கிறான்.
ஆகையால் நீங்கள் அவனுக்குத் தடைபண்ணவே
ண்டாம் என்றார்.

51 அவர் எடுக்கப்படும்படிக்கு காலஞ் சமீபமான
பொழுது அவர் எருசலேமுக்குப்போகக் கண்ணோ
ட்டமாகித் தமக்கு முன்பாகத் தூதர்களை அனுப்
பினார்

52 அவர்கள் போய் அவருக்காக இடம் எத்தனம்
பண்ணும்படிக்குச் சமாரியருடைய ஒரு கிராமத்
திலே பிரவேசித்தார்கள்.

53 அவர் எருசலேம் நகரத்திற்குப் போகிறவரான
படியினாலே அவ்வூரார் அவரை ஏற்றுக்கொள்ளவி
ல்லை.

54 அவருடைய சீஷராகிய யாக்கோபும் யோவானு
ம் அதைக் கண்டு ஆண்டவரே, எலியாவானவர் செ
ய்ததுபோல நாங்கள் இவர்களை அழிக்கும்படிக்கு
வானத்திலிருந்து அக்கினி வரும்படி சொல்லச்சித்
தமாயிருக்கிறீரா என்றார்கள்

55 அப்பொழுது அவர் திரும்பி அவர்களை அதட்டி
நீங்கள் இன்ன ஆவியை உடையவர்களென்று அறி
யீர்களா?

56 மனிதனுடைய குமாரன் மனிதருடைய ஜீவனை
அழிக்கும்படிக்கு அல்ல, இரட்சிக்கும்படிக்கு வந்
தாரே என்றார்.

57 பின்பு வேறொரு கிராமத்திற்குப் போனார்கள்.

அவர்கள் வழியிலே போகையில் ஒருவன் அவரை
நோக்கி ஆண்டவரே, நீர் போகும் இடம் எங்கே
யோ அங்கே உமக்குப் பின் செல்லுவேனென்றான்.
அவனுடனே இயேசுவானவர் சொன்னது நரிக 58
ளுக்குக் குழிகளும் ஆகாயத்திற் பறவைகளுக்குக்
கூடுகளுமுண்டு. மனிதனுடைய குமாரனோ தன் த
லையைச் சாய்க்கிறதற்கு இடமில்லாதவனாய் இருக்
கிறானென்றார்.
வேறொருவனை அவர் நோக்கி எனக்குப் பின்செ 59
ன்றுவா என்றார். (அதற்கு) அவன் சொன்னது,
ஆண்டவரே, முன்பு நான் போய் என் தகப்பனை
அடக்கம்பண்ணும்படிக்கு உத்தரவுகொடுக்க வே
ண்டுமென்றான்.
அதற்கு இயேசுவானவர் சொன்னது, மரித்தோ 60
ர் தங்களிடத்தில் மரித்தவர்களை அடக்கம்பண்ணட்
டும் நீ புறப்பட்டுப் பராபரனுடைய ஆளுகையைப்
பிரசித்தம்பண்ணு என்றார்.
பின்பு வேறொருவன் வந்து உமக்குப் பின்செல் 61
லுவேன். அதற்கு முன்பு நான் போய் என் வீட்டி
லிருக்கிறவர்களிடத்தில் அனுப்பிக்கொண்டு வரும்
படிக்கு உத்தரவுகொடுமென்றான்.
அவனுடனே இயேசுவானவர் சொன்னது, கல 62
ப்பையைப் பிடித்துக்கொண்டு பின்னாகப்பார்க்கிற
எவனும் பராபரனுடைய இராச்சியத்திற்குத் தகு
தியானவனல்லவென்றார்.

---

## ௰. அதிகாரம்.

பின்பு கர்த்தர் வேறு எழுபது பேரை நியமித் 1
துத் தாம்போகச் சித்தமான பட்டினம் ஊர்கள்
யாவுக்கும் அவர்களை இருவரிருவராகத் தமக்கு மு

ல்லே அனுப்புகையில் அவர்களுடனே சொன்ன
தாவது, அறுப்பு மிகுதியாகவேயிருக்கின்றது.
2 வேலையாட்கள் சிலர்மாத்திரம் இருக்கிறார்கள்.
ஆகையால் அறுப்புக்கு எசமான் அறுக்கிறதற்கு
(அதிக) வேலையாட்களை அனுப்பும்படிக்கு அவரை
வேண்டிக்கொள்ளுங்கள்.
3 நீங்கள் புறப்படுங்கள். ஆடுகளைக்கோனாய்களுக்
குள்ளே அனுப்புகிறதுபோல உங்களை அனுப்புகி
றேன்.
4 பணப்பையையாவது சாமான்பையையாவது
பாதரட்சைகளையாவது கூட எடுத்துக்கொண்டு
போகாமலும் வழியில் ஒருவரையும் வினவுதல் செ
ய்யாமலுமிருங்கள்.
5 ஒருவீட்டிற் பிரவேசிக்கிறபொழுது இந்த வீட்
டாருக்குச் சமாதானசவுக்கியம் உண்டாவதாகவெ
ன்று முதலாவது சொல்லுங்கள்.
6 அவ்விடத்திலே சமாதான சவுக்கியத்திற்குப் பா
த்திரனொருவன் இருந்தால் நீங்கள் வாழ்த்திய சமா
தானசவுக்கியம் அவனிடத்திலே தங்கும் அப்படிப்
பட்டவன் இல்லாதிருந்தால் அது உங்களிடமாய்த்
திரும்பும்.
7 அந்தவீட்டிலே நீங்கள் இருந்து வேலையாள் தன்
கூலிக்குப் பாத்திரனானபடியினாலே அவர்களுக்கு
உண்டாயிருக்கிறவைகளைப் போசனபானம்பண்ணு
ங்கள். வீடுகள் தோறும் போகாதிருங்கள்.
8 ஒருபட்டினத்தில் நீங்கள் சேர்ந்தபொழுது அ
ங்கே அவர்கள் உங்களைச் சேர்த்துக்கொண்டால்
உங்கள் முன் வைக்கிறவைகளைப் புசித்து,
9 அவ்விடத்திலுள்ள பிணியாளிகளைக் குணமாக்கிப்
பராபரனுடைய இராச்சியம் உங்களுக்குச் சமீப
மாய்வந்ததென்று அறிவியுங்கள்.

ஒருபட்டிணத்திலே நீங்கள் பிரவேசித்தபொழு 10
து அங்கே அவர்கள் உங்களைச் சேர்த்துக்கொள்ளா
திருந்தால் அதின் வீதிகளில் நீங்கள் புறப்பட்டு,
எங்களில் ஒட்டின உங்கள் பட்டிணத்தின் புழுதி 11
யையும் உங்களுக்கு எதிராகத்தொடைத்துப் போடு
கிறோம். ஆகிலும் பராபரனுடைய ஆளுகை உங்
களுக்குச் சமீபமாய் வந்ததென்கிறதை அறியக்கட
வீர்களென்று சொல்லுங்கள்.
அந்நாளிலே சோதோம் பட்டிணத்தாரிலும் அ 12
ப்படிப்பட்ட பட்டிணத்தார் அதிக தண்டிப்பை
அடைவார்களென்று உங்களுக்குச்சொல்லுகிறேன்.
ஐயோ! கோராசிம் பட்டிணத்தாரே, ஐயோ! 13
பெத்துசாயிதா பட்டிணத்தாரே, உங்களுக்கு வேத
னைவரும். உங்களுக்குள்ளே நடந்த பலத்த செய்
கைகள் தீருசீதோனென்னும் பட்டிணங்களில் நட
ந்தனவானால் அவர்கள் சீக்கிரமாய்த் (துக்கத்தினா
லே) இரட்டை உடுத்திச் சாம்பலிலும் உளுக்கார்ந்
து மனந்திரும்பி இருப்பார்கள்.
ஆகையால் நியாயத்தீர்ப்புநாளிலே தீருசீதோன் 14
பட்டிணத்தாருக்கு வருந் தண்டிப்பு எளிதாயிருக்
கும். நீங்கள் அதிக தண்டிப்பை அடைவீர்கள்.
வானபரியந்தம் உயர்ந்த கப்பர்நாகூம் பட்டி 15
ணத்தாரே, நீங்களும் பாதாளபரியந்தந் தாழ்த்தப்
படுவீர்களென்று சொல்லி,
பின்பு மறுபடியுஞ் சீஷரை நோக்கி உங்களுக்கு 16
ச் செவிகொடுக்கிறவன் எனக்குஞ் செவிகொடுக்கி
றான். உங்களைத் தள்ளுகிறவன் என்னைத் தள்ளுகிறா
ன். என்னைத் தள்ளுகிறவன் என்னை அனுப்பினவ
ரைத் தள்ளுகிறானென்று சொல்லி அனுப்பினார்.
பின்பு அந்த எழுபது பேருஞ் சந்தோஷித்துட 17
னே திரும்பி வந்து ஆண்டவரே, பசாசுக்களும் உ

ம்முடைய நாமத்திஞலே எங்களுக்குக் கீழ்ப்பட்
டிருக்கின்றன என்ருர்கள்.
18 அப்பொழுது அவர் அவர்களை நோக்கி சாத்தா
ன் வானத்திலிருந்து மின்னைப்போல விழுகிறதைக்
கண்டேன்.
19 இதோ, பாம்புகள் மேலுந் தேட்கள்மேலுஞ் ச
த்துருவின் வல்லமை எல்லாவற்றின்மேலும் மிதிக்
கத்தக்கதாக அதிகாரத்தை உங்களுக்குக் கொடுக்கி
றேன். ஒன்றும் உங்களைச் சேதப்படுத்தமாட்டாது.
20 ஆகிலும் ஆவிகள் உங்களுக்குக் கீழ்ப்பட்டிருக்
கிறதிஞலே நீங்கள் சந்தோஷிப்படாமல் உங்கள் நா
மங்கள் பரமண்டலங்களில் எழுதியிருக்கிறதிஞலே
சந்தோஷிப்படுங்கள் என்ருர்
21 அந்நேரத்திலே இயேசுவானவர் ஆவியிலே களி
கூர்ந்து சொன்னதாவது, பிதாவே, வானத்தையும்
பூமியையும் ஆளுகிறவரே, நீர் இவைகளை (உலக)
ஞானிகளுக்குங் கல்விமான்களுக்கும் மறைத்துப்
பாலகருக்கு வெளிப்படுத்தினபடியிஞலே உம்மை
த் துதிசெய்கிறேன். ஆ! பிதாவே, அப்படியே உ
மக்குப் பிரியமாயிருந்ததென்று சொல்லி,
22 பின்பு சகலமும் என் பிதாவிஞல் எனக்கு ஒப்பு
க்கொடுக்கப் பட்டிருக்கின்றது. பிதாத்தவிர ஒரு
வனுங் குமாரனை அறியான். குமாரன் தவிர ஒரு
வனும் பிதாவை அறியான். குமாரன் எவனுக்கு அ
வரை வெளிப்படுத்தச் சித்தமாயிருக்கிருரோ அவ
னும் அவரை அறிவானென்று சொல்லி,
23 பின்பு சீஷரை மாத்திரம் நோக்கி நீங்கள் இவை
களைப் பார்க்கிறவர்களானபடியிஞலே நீங்கள் பா
க்கியமுள்ளவர்கள்.
24 அநேக தீர்க்கதரிசிகளும் இராசாக்களும் நீங்கள்
பார்க்கிறவைகளைக் காணவும் நீங்கள் கேட்கிறவைக

ளைக் கேட்கவும் விரும்பியுங் காணாமலுங் கேளாம
லும் போனார்களென்று உங்களுக்குச் சொல்லுகி
றேனென்றார்.

அப்பொழுது நியாயசாஸ்திரியொருவன் எழுந் 25
திருந்து அவரைச் சோதிக்கும்படிக்குப் போதக
ரே, நித்திய சீவனைச் சுதந்தரித்துக்கொள்ளும்படி
கு நான் என்னசெய்யவேண்டுமென்று கேட்டான்.

அதற்கு அவர் வேதப் பிரமாணத்திலே என்ன 26
எழுதியிருக்கின்றது? என்னத்தை அறிந்திருக்கிறீர்
என்றார்.

அவன் பிரத்தியுத்தரமாகச்சொன்னது, உன் மு 27
ழு இருதயத்தினாலும் உன் முழு ஆத்துமாவினாலும்
உன் முழுப் பலத்தினாலும் உன் முழுச் சிந்தையினா
லும் உன் தேவனாகிய பராபரனிடத்தில் அன்புகூர
வும் நீ உன்னிடத்தில் அன்புகூருகிறதுபோலப் பி
றனிடத்தில் அன்புகூரவும் வேண்டுமென்று எழுதி
யிருக்கின்றதென்றான்.

அவர் சொன்னது, நீர் சரியாய்ச் சொன்னீர். நீ 28
ர் அப்படிச் செய்தால் சீவனை அடைவீரென்றார்.

அப்பொழுது அவன் தன்னை நீதிமானென்று கா 29
ண்பிக்க மனதாய் இயேசுவை நோக்கி எனக்கடுத்த
பிறன் யாவனென்றான்.

அதற்கு இயேசுவானவர் சொன்னது, ஒரு மனி 30
தன் எருசலேம் நகரத்திலிருந்து எரிகோப்பட்டி
னத்துக்குப் போகையிற் கள்ளர் கையில் அகப்பட்
டான். அவர்கள் அவனுடைய வஸ்திரங்களைக் கள
ற்றி அவனைக் காயப்படுத்தி அரைஉயிராகவிட்டுப்
போனார்கள்.

அப்பொழுது தற்செயலாய் ஒரு ஆசாரியன் அ 31
ந்த வழியே சென்று அவனைக் கண்டு பக்கமாய் வி
லகிப்போனான்.

32 அப்படிப்போல ஒரு இலேவியனும் அவ்விடத்
தித் சேர்ந்து அவனைக் கண்டு பக்கமாய் விலகிப்
போனான்.
33 பின்பு சாமாரியன் ஒருவன் பிரயாணமாய்ப் போ
ய் அவனிடத்திற் சேர்ந்து அவனைக் கண்டு,
34 உருக்கமாயிரங்கி அணுகி அவனுடைய காயங்களி
ல் எண்ணெய்யுந் திராட்ச இரசமும் வார்த்துக் கா
யங்களைக் கட்டி அவனைத் தன் மிருகத்தின்மேல் ஏ
ற்றி ஒரு மண்டபத்திற்குக் கொண்டுபோய்ப் பரா
மரித்துக்கொண்டு,
35 மறு நாளிலே புறப்படுகிறபொழுது இரண்டு
வெள்ளிக்காசை எடுத்து மண்டபத்தான் கையிலே
கொடுத்து நீ இவனை விசாரித்துக்கொள். அதிக
மாய் இவனுக்காக எதையாகிலுஞ் செலவழித்தால்
அதை நான் திரும்ப வரும்பொழுது உனக்குக்
கொடுப்பேனென்றான்.
36 அப்படியிருக்கக் கள்வர் கையில் அகப்பட்டவ
னுக்கு அந்த மூன்று பேரில் எவன் அடுத்த பிறனு
யிருந்தான்? உமக்கு எப்படித் தோன்றுகின்றதெ
ன்றார்.
37 அவனிடத்தில் இரக்கஞ் செய்தவனே என்றான்.
அப்பொழுது இயேசுவானவர் நீரும் போய் அந்த
ப்படியே செய்யுமென்றார்.
38 பின்பு அவர்கள் பிரயாணமாய்ப் போகையில் அ
வர் ஒரு கிராமத்திற் பிரவேசித்தார். அங்கே மா
ர்த்தாளென்று பேர்கொண்ட ஒரு ஸ்திரி அவரைத்
தன் வீட்டிலே உபசாரஞ் செய்தாள்.
39 அவளுக்குச் சகோதரியான மரியாள் இயேசுவி
ன் பாதங்களருகே உளுக்கார்ந்து கொண்டிருந்து
அவருடைய வசனத்திற்குச் செவிகொடுத்தாள்.
40 மார்த்தாள் மிகவும் ஊழியஞ் செய்யக் கவலைப்பு

ள்ளவளாய் அவரிடத்திற் சேர்ந்து நின்று ஆண்டவரே, நான் மாத்திரம் ஊழியஞ் செய்யும்படிக்கு என் சகோதரி என்னை விட்டிருக்கிறது உமக்குக் கவலையில்லையா? அவள் எனக்கு உதவி செய்யும்படி சொல்லுமென்றாள்.

இயேசுவானவர் அவளுக்கு மாறுத்தரமாகச் 41 சொன்னது, மார்த்தாளே, மார்த்தாளே, நீ அநேககாரியங்களுக்காகக் கவலைப்பட்டுக் கலக்கமாயிருக்கிறாய்.

ஒன்றுமாத்திரம் வேண்டும். மரியாளே நல்ல 42 பங்கைத் தெரிந்துகொண்டிருக்கிறாள். அது அவளிடத்திலிருந்து எடுக்கப்படுவதில்லையென்றார்.

---

## யக. அதிகாரம்.

ஒருநாள் அவர் ஒரு இடத்திலிருந்து செபம்பண் 1 ணி முடித்த பின்பு அவருடைய சீஷரிலொருவன் அவரை நோக்கி ஆண்டவரே, யோவான் தன் சீஷருக்குச் செபம்பண்ண வகையைப் போதித்தது போல நீரும் எங்களுக்குப் போதிக்க வேண்டுமென்றான்.

அதற்கு அவர் சொன்னது, நீங்கள் செபம்பண் 2 ணும் பொழுது பரமண்டலங்களிலிருக்கிற எங்கள் பிதாவே, உம்முடைய நாமம் பரிசுத்தமாய் வணங்கப்படுவதாக. உம்முடைய இராசரீகம் வருவதாக. உம்முடைய சித்தம் பரமண்டலத்திலே செய்யப்படுகிறது போலப் பூமியிலேயுஞ் செய்யப்படுவதாக.

தினந்தோறும் எங்களுக்கு வேண்டிய ஆகாரத் 3 தைத் தாரும்.

எங்களுக்குக் குற்றஞ் செய்த பாவருக்கும் நாங் 4

கள் மன்னிக்கிறபடியினாலே தேவரீரும் எங்கள் பா
வங்களை மன்னித்தருளும். நாங்கள் சோதனைக்கு
ட் பிரவேசியாதபடி பொல்லாங்கினின்று எங்களை
இரட்சித்துக்கொள்ளுமென்று சொல்லுங்களென்
றார்.
5 அன்றியும் அவர் அவர்களுடனே சொன்னதாவ
து உங்களில் ஒருவன் பாதிராத்திரியிலே தனக்கு
ச் சிநேகிதனானவனிடத்திற்குப் போய்ச் சிநேகித
னே, என் சிநேகிதன் பிரயாணமாய் என்னிடத்தி
ல் வந்திருக்கிறான்.
6 அவன் போசனம்பண்ணச் செய்யும்படிக்கு எ
ன்னிடத்தில் ஒன்றுமில்லை. ஆகையால் நீ எனக்கு
மூன்று அப்பங்களைக் கடன்கொடுக்க வேண்டுமெ
ன்று கேட்கும் பொழுது,
7 வீட்டினுள்ளிருக்கிறவன் எனக்குத் தொந்தரவு
செய்யாதிரு. இப்பொழுது கதவு பூட்டியாயிற்
று என் பிள்ளைகள் என்னுடனே கூடப் படுத்துக்
கொண்டிருக்கிறார்கள். நான் எழுந்து உனக்குக்
கொடுக்கக்கூடாதென்று மாறுத்தரமாகச் சொல்லி,
8 தனக்கு அவன் சிநேகிதனாயிருக்கிறதினாலே அ
வனுக்குக்கொடாதிருந்தும் பின்பு தன்னை அவன்
அதிக வருத்தஞ் செய்கிறபடியினாலே எழுந்திருந்
து அவனுக்கு வேண்டியபடிக்குக் கொடுப்பானெ
ன்று உங்களுக்குச் சொல்லுகிறேனென்றார்.
9 அந்தப்படி நான் உங்களுக்குச் சொல்லுகிற
தாவது, வேண்டிக்கொள்ளுங்கள். அப்பொழுது
உங்களுக்குக் கொடுக்கப்படும். தேடிக்கொள்ளு
ங்கள். அப்பொழுது கண்டடைவீர்கள். தட்டுங்
கள். அப்பொழுது உங்களுக்குத் திறக்கப்படும்.
10 என்னத்தினாலெனில், வேண்டிக்கொள்ளுகிற எ
வனும் வாங்கிக்கொள்ளுகிறான். தேடிக்கொள்ளு

கிறவன் கண்டடைகிறான். தட்டுகிறவனுக்குத் தி
றக்கப்படும்.
அன்றியும் உங்களில் தகப்பனானவனிடத்திற் கு 11
மாரன் அப்பங்கேட்கிறபொழுது அவனுக்குக் கல்
லைக் கொடுப்பானா? மீனைக் கேட்டால் மீனையல்
ல பாம்பைக் கொடுப்பானா?
முட்டையைக் கேட்டால் அவனுக்குத் தேளைக் 12
கொடுப்பானா?
ஆதலாற் பொல்லாதவர்களாகிய நீங்கள் உங்கள் 13
பிள்ளைகளுக்கு நல்ல ஈவுகளைச் செய்யும்படிக்கு அ
றிந்திருக்கப் பரமபிதாவானவர் தம்மைவேண்டிக்
கொள்ளுகிறவர்களுக்கு மிகவும் அதிகமாய்ப் பரிசு
த்த ஆவியைக் கொடாமலிருப்பாராவென்றார்.
ஒருநாள் ஊமையாகச் செய்கிற பசாசைத் துர 14
த்தினார். பசாசு போன பின்பு ஊமையன் பேசி
னான். அதைக் குறித்துச் சனங்கள் ஆச்சரியப்பட்
டார்கள்.
அவர்களிற் சிலர் சொன்னது, இவன் பசாசுகளி 15
ன் தலைவனாகிய பெயெல்சேபூலினாலே பசாசுகளை
த் துரத்துகிறான் என்றார்கள்.
வேறு சிலர் அவரைச் சோதிக்கும்படிக்கு வான 16
த்திலிருந்து ஓரடையாளம் உண்டாகும்படி அவரி
டத்திலே கேட்டுக்கொண்டார்கள்.
அவர்களுடைய சிந்தனைகளை அவர் அறிந்து அவ 17
ர்களுடனே சொன்னதாவது, ஒரு இராச்சியத்தார்
தங்களுக்குள்ளே பிரிவினை உண்டுபண்ணினால் அவ
ர்கள் அழிந்துபோவார்கள். குடும்பங் குடும்பமா
க மடிந்துபோவார்கள்.
அப்படிக்குச் சாத்தானுந் தனக்குத்தானே வி 18
ரோதமாகப் பிரிவுண்டுபண்ணினால் அவனுடைய இ
ராச்சியம் எப்படி நிற்கும்? இப்படியிருக்கநீங்கள்

என்னைப் பெயேல் சேபூலினாலே பசாசுக்களைத் து
ரத்துகிறவனென்கிறீர்கள்.
19 நான் பெயேல் சேபூலைக்கொண்டு பசாசுக்களை
த் துரத்துகிறவனானால் உங்கள் பிள்ளைகள் யாரைக்
கொண்டு அவைகளைத் துரத்துகிறார்கள்? ஆகையா
ல் அவர்கள் உங்களுக்கு நியாயத்தீர்ப்புக் கொடுக்கி
றவர்களாய் இருப்பார்கள்.
20 நான் பராபரனுடைய வல்லமையினாலே பசாசுக்
களைத் துரத்துகிறபடியால் பராபரனுடைய இராச்
சியம் உங்களுக்குள்ளே சடுதியாய் வந்திருக்கின்றதே.
21 ஆயுதந்தரித்த பலவான் தன் அரண்மனையின் வா
சலைக் காக்கிறபொழுது அவனுடைய பொருள் ப
த்திரப்பட்டிருக்கும்.
22 அவனிலும் அதிக பலவான் வந்து அவனைச் செ
யித்தால் அவன் நம்பியிருந்த சகல ஆயுதவர்க்கத்
தையும் பறித்துக்கொண்டு அவனுடைய உடைமை
களைப் பங்கிட்டுக்கொள்வான்.
23 என்னுடனே இராதவன் எனக்கு விரோதமாயி
ருக்கிறான். என்னைப் போலச் சேர்த்துக்கொள்
ளாதிருக்கிறவன் சிதற அடிக்கிறான்.
24 அசுத்த ஆவி ஒரு மனிதனை விட்டுப் புறப்படுகி
றபொழுது அது தண்ணீரில்லாத இடங்களில் இ
ளைப்பாறும் இடத்தைத் தேடித் திரிந்து அடையா
மலிருக்குங் காலத்தில் அது தான் விட்டு வந்த வீட்
டிற்குத் திரும்பவேண்டுமென்று சொல்லி,
25 அந்தப்படி வருகிறபொழுது அது பெருக்கிச்
சிங்காரிக்கப்பட்டிருக்கக்கண்டு,
26 பின்பு போய்த் தன்னிலும் அதிக பொல்லாத
வேறு ஏழு ஆவிகளைக் கூட்டிக்கொண்டுவந்து உட்
பிரவேசித்து அங்கே குடியிருக்கும். அப்பொழு
து அம்மனிதனுடைய முன்னிலைமையிலும் பின்னி

லைமை அதிக கேடுள்ளதாயிருக்குமென்றார்.

இவைகளை அவர் சொல்லுகையிற் கூட்டத்திலி 27
ருந்த ஒரு ஸ்திரியானவள் அவரை நோக்கி உம்மை
ச் சுமந்த வயிறும் நீர் பாலுண்ட முலைகளும் பாக்
கியமுள்ளவைகளென்று சத்தமாய்க் கூப்பிட்டாள்.

அவர் சொன்னது, அதனிலும் அதிகமாய்ப் ப 28
ராபரனுடைய வாக்கைக்கேட்டு அதைக் காத்துக்
கொள்ளுகிறவர்களே பாக்கியவான்களென்றார்.

அன்றியுஞ் சனங்கள் திரளாய்க் கூடி வந்திருக்கி 29
றபொழுது அவர் சொன்னதாவது, இந்தச் சந்ததி
யார்கள் பொல்லாதவர்களாய் இருக்கிறார்கள். ஓர்
அடையாளத்தைத் தேடுகிறார்கள். ஆனாலும் யோ
னாதீர்க்கதரிசியின் அடையாளமே அன்றி வேறு அ
டையாளம் இவர்களுக்குக் கொடுக்கப்படுவதில்லை.

ஆதலால் யோனாவானவன் நினிவேபட்டினத்தா 30
ருக்கு அடையாளமாயிருந்ததுபோலமனிதனுடை
ய குமாரனும் இந்தச் சந்ததிக்கு இருப்பார்.

தெற்கு இராசஸ்திரி சாலோமோனுடைய ஞா 31
னத்தைக் கேட்கும்படிக்குப் பூமியின் எல்லைகளிலி
ருந்து வந்தாள். சாலோமோனிலும் இந்தச் சந்த
தியிலே தோன்றினவன் அதிகமாயிருக்கிறான். ஆ
னாலும் இவர்கள் கேட்கமாட்டார்கள் ஆதலால் அ
ந்த இராசஸ்திரி நியாயத்தீர்ப்புநாளிலே இவர்களு
டனே கூட எழும்பி இவர்களை ஆக்கினைக்குள்ளாக
த் தீர்ப்பாள்.

நினிவேபட்டினத்தார் யோனாவின் பிரசங்கத் 32
தைக் கேட்டு மனந்திரும்பினார்கள். யோனாவிலும்
இந்தச் சந்ததியிலே தோன்றினவன் அதிகமாயிருக்
கிறான். (ஆனாலும் இவர்கள் மனந்திரும்பவில்லை,)
ஆகையால் நினிவேபட்டினத்தார் நியாயத்தீர்ப்பு
நாளிலே இவர்களுடனே கூட எழும்பி இவர்களை

ஆக்கினைக்குள்ளாகத் தீர்ப்பார்கள்.
33 அன்றியும் ஒருவனும் விளக்கைக் கொளுத்தி அ
தை அந்தரங்கத்திலாவது மரக்காலின் கீழாவது
வைக்கமாட்டான். உள்ளே வருகிறவர்கள் வெளி
ச்சங்காணும்படிக்கு அதை ஒரு தண்டின்மேலே
வைப்பான்.
34 கண்ணானது சரீரத்தின் விளக்காயிருக்கின்றது.
அப்படியிருக்க உன் கண் தெளிவுள்ளதாயிருந்
தால் உன் சரீரம் முழுவதும் வெளிச்சம் அடைந்
திருக்கும். அது கெட்டதானால் உன் சரீரம் இரு
ள் அடைந்திருக்கும்.
35 ஆகையால் உன்னிலுள்ள வெளிச்சமானது இரு
ளாயிராதபடிக்கு எச்சரிக்கையாயிரு.
36 அப்படி உன் சரீரம் ஒருபுறத்திலும் இருள் அ
டைந்திராமல் முழுவதும் வெளிச்சமாயிருந்தால் அ
ப்பொழுது ஒரு விளக்குத் தன் பிரகாசத்தினாலே
உன்னை வெளிச்சமாக்குகிறதுபோல அது முழுவ
தும் வெளிச்சம் அடைந்திருக்குமென்றார்.
37 அவர் அப்படிப் பேசிக்கொள்ளுகையில் ஒரு ப
ரிசேயன் தன்னுடனே கூடப் பகற் போசனம்ப
ண்ணும்படிக்கு அவரை வேண்டிக்கொண்டான்.
அவர் போய்ப் பந்தியிருந்தார்.
38 போசனம்பண்ணுகிறதற்கு முன்னே அவர் ஸ்நா
னம்பண்ணாமலிருந்ததைப் பரிசேயன் கண்டு ஆச்
சரியப்பட்டான்.
39 அப்பொழுது கர்த்தர் அவனை நோக்கி பரிசேய
ராகிய நீங்கள் போசனபான பாத்திரங்களில் வெ
ளிப் புறத்தைச் சுத்தம்பண்ணுகிறீர்கள். உங்கள்
உள்ளங் கொள்ளையினாலும் துராகிருதத்தினாலும் நிறை
ந்திருக்கின்றது.
40 ஆ! புத்தியீனரே, வெளிப்புறத்தை உண்டாக்கி

னவர் உட்புறத்தையும் உண்டாக்கவில்லையா?

அப்படியிருக்க, உங்களுக்கு உண்டானவைகளை 41
ப் பிச்சையாகக் கொடுங்கள். அப்பொழுது சகல
மும் உங்களுக்குச் சுத்தமாயிருக்கும்.

ஐயோ! பரிசேயராகிய உங்களுக்கு வேதனை வ 42
ரும். என்னத்தினாலெனில் நீங்கள் துளசியிலும் அ
ருயி பூண்டிலுஞ் சகலவிதக் கீரைகளிலும் பத்தி
லொன்றுகொடுத்து நியாயத்தையுந் தேவ அன்பை
யும் விட்டு விலகுகிறீர்கள். இவைகளை நீங்கள் நடப்
பித்து அவைகளையும் விட்டுவிடாதிருக்க வேண்டும்.

ஐயோ! பரிசேயரே, உங்களுக்கு வேதனைவரு 43
ம். என்னத்தினாலெனிற் செப ஆலயங்களில் முத
ல் ஆசனத்தையுஞ் சந்தைகளில் வாழ்த்துதல்களை
யும் விரும்புகிறீர்கள்.

ஐயோ! வஞ்சகராகிய வேதபாரகரே, பரிசேய 44
ரே, உங்களுக்கு வேதனைவரும். என்னத்தினாலெ
னிற் காணப்படாத பிரேதக் குழிகளைப்போலிருக்
கிறீர்கள். மனிதர் அவைகளை அறியாமல் அவைகள்
மேலே நடக்கிறார்களென்றுசொல்லுகிறபொழுது,

நியாய சாஸ்திரிகளிலொருவன் அவரை நோக்கி 45
ப் போதகரே, நீர் இப்படிச் சொல்லுகிறதினாலே
எங்களையும் நிந்திக்கிறீரே என்றான்.

அதற்கு அவர் சொன்னது, ஐயோ! நியாய சா 46
ஸ்திரிகளாகிய உங்களுக்கும் வேதனைவரும். என்
னத்தினாலெனில், மிகவும் பாரமான சுமைகளை ம
னிதர்கள் மேல் ஏற்றுகிறீர்கள். நீங்கள் தாமே உ
ங்கள் விரல்களிலொன்றினாலும் அந்தச் சுமைகளை
த் தொடமாட்டீர்கள்.

ஐயோ! உங்களுக்கு வேதனைவரும். என்னத்தி 47
னாலெனில் உங்கள் பிதாக்களாற் கொலைசெய்யப்ப
ட்ட தீர்க்கதரிசிகளுடைய பிரேதக்குழிகளின் மே

லே திண்ணையைக் கட்டுகிறீர்கள்.
48 உங்கள் பிதாக்கள் அவர்களைக் கொலைசெய்த பி
ன்பு நீங்கள் அவர்களுடைய கல்லறைகளின் மேல்
வீடுகட்டுகிறபடியால் நீங்கள் உங்கள் பிதாக்களுடை
ய கிரியைகளுக்குச் சம்மதிக்கிறவர்களென்று சாட்
சிகொடுக்கிறீர்கள்.
49 ஆகையாற் பராபரனுடைய ஞானஞ் சொல்லுகி
றதாவது, நான் தீர்க்கதரிசிகளையும் அப்போஸ்தல
ரையும் அவர்களிடத்தில் அனுப்புவேன். அவர்க
ளிற் சிலரைக் கொலைசெய்து சிலரைத் துன்பப்ப
டுத்துவார்கள்.
50 உலகத் தோற்றம் முதற்கொண்டு ஆபேலின் இ
ரத்தந் தொடங்கிப் பலிபீடத்துக்குந் தேவாலயத்
துக்கும் நடுவே அழிக்கப்பட்ட சகரியாவின் இரத்
தம் வரைக்குஞ் சிந்தப்பட்ட சகல தீர்க்கதரிசிகளு
டைய இரத்தமும் இந்தச் சந்ததியினிடத்திலே கே
ட்கப்படும்படிக்கு அப்படிச் செய்வார்கள்.
51 இந்தச் சந்ததியினிடத்திலே அது கேட்கப்படு
மென்று நிச்சயமாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.
52 ஐயோ! நியாயசாஸ்திரிகளாகிய உங்களுக்கு வே
தனை வரும். என்னத்தினாலெனில் அறிவின் திறவு
கோலை எடுத்துக்கொண்டு போனீர்கள். நீங்களே
உட்பிரவேசிக்கவில்லை. உட்பிரவேசிக்கிறவர்களு
க்குந் தடைபண்ணினீர்களென்றார்.
53 இவைகளை அவர் அவர்களுடனே பேசிக்கொண்
டபொழுது வேதபாரகரும் பரிசேயரும் அவரிட
த்திற் குற்றங் காணும்படிக்கு,
54 அநேக காரியங்களைக் குறித்து அவர் பேசும்படி
மிகவும் அவரை நெருக்கமாய் வினாவித் தந்திரமாய்
க் காத்திருந்து அவருடைய வாய்மொழியிலே தப்
பிதங் காணப் பார்த்தார்கள்.

---

## ௰உ. அதிகாரம்.

அத்தருணத்திலே அநேக ஆயிரஞ் சனங்கள் ஒரு 1
வரையொருவர் மிதித்துக் கொள்ளத்தக்கதாகக் கூ
டி வந்திருக்கிறபொழுது அவர் தமது சீஷருடனே
சொன்னதாவது, பிரதானமாய் நீங்கள் வஞ்சகமா
கிய பரிசேயருடைய புளிப்புள்ள மாவுக்கு இடங்
கொடாமல் எச்சரிக்கையாயிருங்கள்.
வெளியாகாத மறைபொருளும் அறியப்படாத ௨
அந்தரங்கமும் ஒன்றுமில்லை.
அப்படியிருக்க நீங்கள் இருளிற் பேசினது எது 3
வோ அது வெளிச்சத்திலே கேட்கப்படும். நீங்க
ள் அறைகளிற் காதுக்குட் சொன்னது எதுவோ
அது வீடுகள் மேலே பிரசங்கிக்கப்படும்.
அல்லாமலும் என் சிநேகிதரான உங்களுக்கு நா 4
ன் சொல்லுகிறதாவது, சரீரத்தைக் கொலைசெய்தா
லும் அதின் பின்பு அதிகம் ஒன்றும் உங்களுக்குச்
செய்யத் திராணியில்லாதவர்களுக்குப் பயப்படா
திருங்கள்.
நீங்கள் பயப்படத்தக்கவர் இன்னாரென்று உங்க 5
ளுக்குக் காண்பிக்கிறேன். கொலைசெய்த பின்பு ந
ரகத்திலே தள்ளுகிறதற்கு அதிகாரமுடையவரா
கிய (பராபரனுக்கு) பயப்படுங்கள். அவருக்கே
பயப்படக் கடவீர்களென்று உங்களுக்குச் சொல்
லுகிறேன்.
இரண்டு காசுக்கு ஐந்து அடைக்கலான் குருவிக 6
ளை விற்கிறார்களல்லவோ. ஆனாலும் அவைகளில் ஒ
ன்றும் பராபரனாலே மறக்கப்படுகிறதில்லை.
உங்கள் தலையிலுள்ள எல்லா மயிர்களும் எண்ண 7
ப்பட்டிருக்கின்றது. ஆகையாற் பயப்படாதிருங்க

ள். அநேகம் அடைக்கலான் குருவிகளிலும் நீங்க
ள் மேன்மையாயிருக்கிறீர்கள்.
8 அன்றியும் நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவ
து, எவனாகிலும் மனிதர் முன்பாக என்னை அறிக்
கைபண்ணினால் மனிதனுடைய குமாரனும் பராப
ரனுடைய தூதர்கள் முன்பாக அவனை அறிக்கைப
ண்ணுவான்.
9 மனிதர் முன்பாக என்னை மறுதலிக்கிறவன் பரா
பரனுடைய தூதர்கள் முன்பாக மறுதலிக்கப்படு
வான்.
10 எவனாகிலும் மனிதனுடைய குமாரனுக்கு விரோ
தமாய்ப் பேசினால் அது அவனுக்கு மன்னிக்கப்ப
டும். பரிசுத்த ஆவியைத் தூஷணிக்கிறவனுக்கு அ
து மன்னிக்கப்படாது.
11 அன்றியுஞ் செப ஆலயங்களுக்கும் துரைத்தனங்
களுக்கும் அதிகாரங்களுக்கும் முன்பாக உங்களைக்
கொண்டுபோய் விடும்பொழுது எப்படி என்னத்
தை எதிருத்தரவாகச் சொல்லுவோமென்றும் எதை
ப் பேசுவோமென்றுங் கவலைப்படாதிருங்கள்.
12 நீங்கள் பேசவேண்டியவைகளைப் பரிசுத்த ஆவி
யானவர் அந்நேரத்திலே உங்களுக்குப் போதிப்பா
ரே என்றார்.
13 அப்பொழுது கூட்டத்திலொருவன் அவரை நோ
க்கிப் போதகரே, என் சகோதரன் எனக்கும் தன
க்குமுண்டான சுதந்தர ஆஸ்தியைப் பங்கிட்டுக்
கொள்ளும்படிக்குக் கட்டளையிடும் என்றான்.
14 அதற்கு அவர் சொன்னது, மனிதனே என்னை
உங்களுக்கு நியாயாதிபதியாகவும் பங்கிடுகிறவனாக
வும் ஏற்படுத்தினவன் யாவனென்றுசொல்லி,
15 பின்பு எல்லாரையும் நோக்கி ஒருவனுக்கு எவ்வ
ளவு ஆஸ்தியுண்டாயிருந்தாலும் அவைகளினாலே அ

வனுடைய ஜீவனுண்டாயிராது. ஆகையால் நீங்கள்
பொருளாசைக்கு இடங்கொடாமல் எச்சரிக்கையா
யிருக்கக் கடவீர்களென்றார்.
அல்லாமலும் ஒரு உவமையை அவர்களுக்குச் 16
சொன்னார். அதாவது, ஐசுவரியமுள்ள ஒருமனித
னுடைய காணி பூமி நன்றாய் விளைந்தது.
அப்பொழுது அவன் தனக்குள்ளே சிந்தித்துக் 17
கொண்டு சொன்னது, என் தானியத்தைச் சேர்த்
து வைக்கிறதற்கு வேண்டிய இடமில்லையே.
நான் என்னசெய்யலாம்! என் களஞ்சியங்களை 18
நான் இடித்து அதிக பெரிதானவைகளைக் கட்டி எ
னக்கு உண்டான தானியம் யாவையும் என்பொரு
ளையும் அங்கே சேர்த்து வைக்கவேண்டும்.
பின்பு நான் என் ஆத்துமாவே, அநேகவருஷங்க 19
ளுக்குஉனக்காகயிருந்தபொருள்கள்வைக்கப்பட்டி
க்கின்றன. ஆகையால் இளைப்பாறிப் புசித்துக்கு
டித்து மகிழ்ச்சியாயிருவென்று என் ஆத்துமாவுட
னே சொல்லவேண்டுமென்றான்.
அப்பொழுது பராபரன் அவனுடனே சொன் 20
னது, புத்தியீனனே, இந்த இராத்திரியிலே உன்
ஆத்துமாவை உன்னிடத்திற் கேட்டு எடுத்துக்கொ
ள்வார்கள். அப்பொழுது நீ சேகரித்தவைகள் யா
ருக்காக இருக்குமென்றார்.
பராபரனில் ஐசுவரியவானாயிராமல் தனக்காகப் 21
பொக்கிஷங்களைச் சேர்க்கிறவனுக்கு அப்படியே ச
ம்பவிக்குமென்று சொல்லி,
பின்பு தம்முடைய சீஷரை நோக்கி அதினாலே 22
நீங்கள் உங்கள் ஜீவனைக்குறித்து என்ன உண்போ
மென்றும் உங்கள் சரீரத்தைக் குறித்து என்ன உடு
ப்போமென்றுங் கவலைப்படாதிருங்களென்று உங்
களுக்குச் சொல்லுகிறேன்.

23 ஆகாரத்திற்குச் சீவனும் உடைக்குச் சரீரமும் அதிகமாயிருக்கின்றதே.

24 காகங்களை நோக்கிப் பாருங்கள். அவைகள் விதைக்கிறதும் இல்லை அறுக்கிறதும் இல்லை. அவைகளுக்குப் பண்டகசாலையுங் களஞ்சியமுமில்லை. அவைகளுக்கும் பராபரன் உணவுகொடுக்கிறார். பறவைகளிலும் நீங்கள் மிகவும் அதிக மேன்மையாயிருக்கிறீர்களல்லவா?

25 அன்றியும் உங்களிலொருவன் கவலைப்படுகிறதினாலே தன் வயசோடே ஒரு நாழிகையையாகிலுங் கூட்டுவானோ?

26 மிகவுஞ் சிறிதானது உங்களாலாகாதிருக்க மற்றவைகளுக்காக நீங்கள் என்னத்திற்குக் கவலைப்படுகிறீர்கள்.

27 லீலியென்னும் புஷ்பங்கள் வளருகிற வகையைச் சிந்தித்துக்கொள்ளுங்கள். அவைகள் வருந்துகிறதுமில்லை. நூற்கிறதுமில்லை. (அவை மிகவும் அழகாயிருக்கின்றன) சாலோமோன்தானே மிகுந்த மகிமையுடையவனாயிருந்தும் அவைகளில் ஒன்றைப்போல (அழகாய்) உடுத்தியிருக்கவில்லையென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

28 அப்படியிருக்க, அற்பவிசுவாசிகளே, இன்றைக்கு வெளியிலிருந்து நாளைக்கு அடுப்பிற் போடப்படுகிற புல்லுக்குப் பராபரன் இவ்விதமாக உடுத்தினால் மிகவும் அதிகமாய் உங்களுக்கு அப்படிச்செய்வாரல்லவா?

29 ஆகையால் என்னத்தை உண்போம் என்னத்தைப் பானம்பண்ணுவோமென்று நீங்கள் கேளாமலுங் கலக்கம் அடையாமலுமிருங்கள்.

30 உலகத்தார் இப்படிப்பட்டவைகள் யாவையுந் தேடுகிறார்கள். இவைகள் உங்களுக்கு வேண்டுமெ

ன்று உங்கள் பிதாவானவர் அறிந்திருக்கிறார்.
விசேஷமாய்ப் பராபரனுடைய இராச்சியத்தை 31
த் தேடுங்கள். அப்பொழுது இவைகளெல்லாம் உ
ங்களுக்குக் கூடக் கொடுக்கப்படும்.
சின்ன ஆட்டுக்கூட்டமே, உங்கள் பிதா இராச்சி 32
யத்தை உங்களுக்குக் கொடுக்கப் பிரியமாயிருக்கிறா
ர் ஆகையாற் பயப்படாதிருங்கள்.
உங்களுக்கு உண்டானவைகளை விற்றுப் பிச்சை 33
கொடுங்கள். உங்கள் பொக்கிஷம் எங்கேயோ அ
ங்கே உங்கள் இருதயமுமிருக்கும்.
ஆகையாற் பழமையாய்ப் போகாத பணப்பை 34
களையுங் குறைந்து போகாத பொக்கிஷத்தையும்
பரமண்டலங்களில் உங்களுக்காக உண்டுபண்ணுங்
கள். அங்கே திருடன் சேருகிறதுமில்லை பூச்சிகெ
டுக்கிறதுமில்லை.
உங்கள் அரைகள் கட்டப்பட்டவைகளாகவும் உங் 35
கள் விளக்குகள் எரிகிறவைகளாகவுந் தங்கள் எசமா
ன் கலியாணத்திலிருந்து திரும்பி வந்து தட்டும்
பொழுது உடனே அவருக்குத் திறக்கும்படிக்கு
அவன் வரக் காத்திருக்கிற மனிதருக்கு ஒப்பாகவு
மிருங்கள்.
எசமான் வந்து விழித்திருக்கக் காணும் ஊழிய 36
க்காரரே பாக்கியர்.
அவன் அரையிற் கச்சைக் கட்டிக்கொண்டு அவ 37
ர்களைப் பந்தியிருக்கச் செய்து பின்பு வந்து அவர்
களுக்கு ஊழியஞ் செய்வானென்று மெய்யாகவே
உங்களுக்குச் சொல்லுகிறேன்.
அவன் இரண்டாஞ் சாமத்திலாவது மூன்றாஞ் சா 38
மத்திலாவது வந்து அப்படியே கண்டால் அவ்வூழி
யக்காரர் பாக்கியவான்களாயிருப்பார்கள்.
திருடன் இன்னவின்ன நேரத்தில் வருவானென் 39

று வீட்டெசமான் அறிந்தால் அவன் விழித்திருந்து தன் வீட்டைக் கன்னமிடும்படிக்கு இடங்கொடுக்க மாட்டான். அது உங்களுக்குத் தெரியும்.

40 அந்தப்படியே நீங்களும் நினையாத நேரத்திலே மனிதனுடைய குமாரன் வருவதால் எத்தனமாயிருக்கக் கடவீர்களென்றார்.

41 அப்பொழுது பேதுரு அவரை நோக்கி ஆண்டவரே, இந்த உவமையை நீர் எங்களுக்கு (மாத்திரம்) சொல்லுகிறீரோ எல்லாருக்குஞ் சொல்லுகிறீரோ என்றான்.

42 அதற்குக் கர்த்தர் சொன்னது, தகுதியான காலத்திலே படிகொடுக்கும்படிக்கு எசமான் தன்னுடைய பணிவிடைச் சனங்கள்மேல் வைக்கத்தக்க உண்மையும் புத்தியுமுள்ள விசாரணைக்காரன் யாவன்?

43 எசமான் வரும்பொழுது அப்படிச் செய்யக்காணப்படுகிற ஊழியகாரன் பாக்கியவான்.

44 எசமான் தனக்குண்டான எல்லாவற்றின்மேலும் அவனை வைப்பானென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

45 அந்த ஊழியகாரன் என் எசமான் வரத் தாமதிக்கிறானென்று தன் இருதயத்திலெண்ணி வேலைக்காரரையும் வேலைக்காரிகளையும் அடிக்கவும் புசித்துக் குடித்து வெறிகொள்ளவுந் தொடங்கினால்,

46 அந்த ஊழியகாரன் நினையாதநாளிலும் அறியாத நேரத்திலும் அவனுடைய எசமான் வந்து அவனைத் துண்டித்துப் போட்டு உண்மையில்லாதவர்களுடனே அவனுக்குப் பங்கை ஏற்படுத்துவான்.

47 மிகுதியைப் பெற்றவனெவனோ அவனிடத்தில் மிகவும் விசாரிக்கப்படும். மிகுதியைப் பற்றிக்கொண்டவனிடத்தில் அதிகங் கேட்கப்படும்.

48 ஆதலால் தன் எசமானுடைய சித்தத்தை அறிந்

னும் எத்தனமாயிராமலும் அவனுடைய சித்தத்தி
ன்படி செய்யாமலுமிருக்கிற ஊழியகாரன் அநே
க அடிகளைப் பெற்றுக்கொள்வான் (சித்தத்தை) அ
றியாதவனாயிருந்து அடிகளுக்கு ஏற்றவைகளைச்
செய்கிறவன் கொஞ்ச அடிகளைப் பெற்றுக்கொள்
வான்.

அக்கினியைப் பூமியின்மேற் போடவந்தேன் 49
அது இப்பொழுது பற்றி எரியும்படிக்கு விரும்பு
கிறேன்.

அதற்கு முன்னே நான் அடையவேண்டிய ஒரு 50
ஸ்நானமுண்டு. அது முடியுமளவும் நான் மிகவும்
நெருக்கப்படுகிறேன்.

நான் பூமிக்குச் சமாதானத்தைத் தரும்படிக்கு 51
வந்தேனென்று நினைக்கிறீர்கள்? அதையல்ல, பிரிவி
னையைத் தரும்படிக்கு வந்தேனென்று உங்களுக்
குச் சொல்லுகிறேன்.

எப்படியெனில் இது முதல் ஒரே குடும்பத்தி 52
லே ஐந்துபேர் பிரிந்திருப்பார்கள். மூன்றுபேர்
இரண்டுபேருக்கும் இரண்டுபேர் மூன்றுபேருக்
கும் விரோதமாயிருப்பார்கள்.

தகப்பன் மகனுக்கும் மகன் தகப்பனுக்குந் தா 53
ய் மகளுக்கும் மகள் தாய்க்கும் மாமி தன் மருமக
ளுக்கும் மருமகள் தன் மாமிக்கும் விரோதமாகப்
பிரிந்துபோவார்கள் என்றார்.

பின்பு அவர் சனங்களுடனே சொன்னது, நீங்க 54
ள் ஒரு மேகம் மேற்கிலே எழும்புகிறதைக் காண்கி
றவுடனே பெருமழை வருமென்று சொல்லுகிறீர்
கள். அந்தப்படியேயும் ஆகும்.

அல்லாமலுந் தென்றல் அடிக்கிறதை நீங்கள் கா 55
ண்கிறபொழுது காங்கையுண்டாகுமென்கிறீர்கள்.
அந்தப்படியேயும் ஆகும். ஆ! வஞ்சகரே, பூமியி

ன் உருவத்தையும் வானத்தின் உருவத்தையும் வகை
யறுக்க அறிந்திருக்கிறீர்கள். இக்காலத்தைமாத்திர
ம் நீங்கள் வகையறுமலிருக்கிறதெப்படி?
56 அல்லாமலும் நியாயமின்னதென்று நீங்கள் உங்
களாலே எண்ணிக்கொள்ளாமலிருக்கிறதென்ன?
57 நீ உன் எதிராளியுடனே கூடத் துரையினிடத்
துக்குப் போகிற பொழுது அவனைவிட்டு நீங்கும்
படிக்கு வழியிலே பிரயாசப்படுவாயாக. இல்லா
விட்டால் அவன் உன்னை நியாயாதிபதிக்கு முன்பா
கக் கொண்டுபோவதுமல்லாமல் நியாயாதிபதி உ
ன்னைச் சேவகனுக்கு ஒப்புக்கொடுப்பான். சேவ
கன் உன்னைக் காவலிற் போடுவான்.
58 நீ ஒரு காசாகிலுங் குறையாமற் செலுத்துகிறவ
ரைக்கும் அவ்விடத்திலிருந்து விடுதலையாக்கப்பட
மாட்டாயென்று உனக்குச் சொல்லுகிறேனென்
றார்.

---

௰௩. அதிகாரம்.

1 பிலாத்தென்பவன் சில கலிலேயருடைய இரத்த
த்தை அவர்களுடைய பலிகளுடனே கலந்திருந்தா
ன். அந்தக் கலிலேயரைக் குறித்து அவ்வேளையி
லே அங்கேயிருக்கிற சிலர் அவருடனே பேசிக்கொ
ண்டார்கள்.
2 அவர்களுக்குப் பிரத்தியுத்தரமாக இயேசுவா
னவர் சொன்னதாவது, அந்தக் கலிலேயர் அப்படி
ப்பட்டவைகளை அநுபவித்ததினாலே மற்றெல்லா
க் கலிலேயரிலும் (அதிக) பாவிகளாயிருந்தார்கள்
என்று நினைக்கிறீர்கள்?
3 அப்படியில்லை என்று உங்களுக்குச் சொல்லுகி
றேன். நீங்கள் மனந்திரும்பாவிட்டால் எல்லாரு

ம் அப்படிக் கெட்டுப் போவீர்கள்.
அல்லாமலுஞ் சீலோவாமிலே கோபுரம் விழுந் 4
து பதினெட்டுப்பேரைக் கொன்றதே. எருசலே
மிற் குடியிருக்கிற மனிதர் எல்லாரிலும் அந்தப் ப
தினெட்டுப்பேரும் அதிக குற்றவாளிகளாயிருந்தா
ர்களென்று நினைக்கிறீர்கள்?
அப்படியில்லை என்று உங்களுக்குச் சொல்லுகி 5
றேன். நீங்கள் மனந் திரும்பாவிட்டால் எல்லாரு
ம் அப்படிப்போலக் கெடுவீர்கள் என்றார்
அல்லாமலும் அவர் சொன்ன உவமையாவது, 6
ஒருவன் திராட்சத் தோட்டத்தில் ஒரு அத்திமரத
தை நாட்டியிருந்தான்.
பின்பு அவன் வந்து அதிலே கனியைத் தேடின 7
பொழுது ஒன்றுங் காணவில்லை. உடனே அவன்
தோட்டக்காரனை நோக்கி, இதோ மூன்றுவருஷ
மாய் இந்த அத்திமரத்திலே கனியைத தேடி வருகி
றேன் ஒன்றுங் காணவில்லை இதை வெட்டிப்போ
டு நிலத்தையும் இது ஏன் அந்தரங்கக் கெடுக்கிறதெ
ன்றான்?
அதற்கு அவன் சொன்னது, ஐயா, நான் இதைச் 8
சுற்றிக் கொத்தி எருப்போடுவேன். ஒருவேளை இ
து கனிகொடுக்கும். ஆகையால் இது இந்தவருஷ
ம் வரைக்கும் இருக்கட்டும்.
கனிகொடாதிருந்தால் நீர் இனிமேல்இதை வெட் 9
டிப்போடலாமென்று சொல்லுமென்றார்.
ஒரு ஓய்வுநாளில் அவர் ஒரு ஜெப ஆலயத்திற் 10
போதகம்பண்ணிக்கொண்டிருந்தபொழுது,
பதினெட்டு வருஷமாய்ப் பலவீனமாகச செய் 11
கிற ஆவியையுடைய ஒரு ஸ்திரி அங்கேயிருந்தாள்
அவள் எவ்வளவும் நிமிரக் கூடாத கூனியாயிருந்
தாள்.

12 இயேசுவானவர் அவளைக் கண்டு தம்மிடத்தில்
அழைத்து ஸ்திரியே, உன் பலவீனத்திலிருந்து விடு
தலையாக்கப்பட்டாயென்று சொல்லி அவள்மேலே
தமது கைகளை வைத்தார்.
13 உடனே அவள் நிமிர்ந்து பராபரனைத் துதிசெய்
தாள்.
14 இயேசுவானவர் ஓய்வுநாளிலே குணமாக்கினதை
ச் செப ஆலயத் தலைவன் கண்டு விசனம் அடைந்து
சனங்களை நோக்கி வேலைசெய்யும்படிக்கான ஆறு
நாளுண்டு. அவைகளிலே நீங்கள்வந்து குணமாக்கி
க் கொள்ளுங்கள். ஓய்வுநாளிலே அப்படிச்செய்யக்
கூடாதென்றான்.
15 அவனுக்கு மாறுத்தரமாகக் கர்த்தர் சொன்னது,
வஞ்சகனே, உங்களில் எவனொருவனுந் தன் எருதை
அல்லது தன் கழுதையை ஓய்வுநாளிலே தொழுவி
லிருந்து அவிழ்த்துக்கொண்டுபோய் அதற்குத் த
ண்ணீர் காட்டுகிறதில்லையா?
16 (அதுபோல) ஆபிரகாமின் சந்ததியும் பதினெட்
டு வருஷஞ் சாத்தானாலே கட்டப்பட்டிருக்கிற இ
வளை ஓய்வுநாளிலே அந்தச் சங்கிலியிலிருந்து அவிழ்
த்துவிட வேண்டியதில்லையா என்றார்?
17 அப்படி அவர் சொன்னபொழுது அவரை வி
ரோதித்திருந்த அனைவரும் வெட்கப்பட்டார்கள்.
அல்லாமலுஞ் சனங்கள் யாவரும் அவர்செய்த மகி
மையான செய்கைகளைக் குறித்துச் சந்தோஷிப்ப
ட்டார்கள்.
18 பின்பு அவர் சொன்னது, பராபரனுடைய இரா
ச்சியம் எதற்கு ஒப்பாயிருக்கின்றது. அதை எதற்
கு நிகர்சொல்லுவேன்.
19 அது ஒரு கடுகு விதைக்கு ஒப்பாயிருக்கின்றது
(எப்படியெனில்) ஒரு கடுகை ஒரு மனிதன் எடுத்

துத் தன் தோட்டத்திற்போட்டான். அது வளர்ந்து பெரிய செடியாயிற்று. அப்பொழுது ஆகாசத்துப்பறவைகள் அதின் கிளைகளிற் கூடுகட்டினவென்றான்.

அன்றியும் அவர் சொன்னது, பராபரனுடைய 20
இராச்சியத்தை எதற்கு நிசர்சொல்வேன்.

அது புளிப்புள்ளமாவுக்கு ஒப்பாயிருக்கின்றது. 21
எப்படியெனில் அதை ஒரு ஸ்திரியெடுத்து மூன்று மரக்கால் மா முழுவதும் புளிப்படையத்தககதாக அதிலே அடக்கிவைத்தாளென்றார்.

அன்றியும் அவர் எருசலேமுக்குப் பிரயாணமா 22
ய்ப் போகிறபொழுது பட்டினங்கள்தோறும் கிராமங்கள்தோறும் போய் உபதேசம்பண்ணினார்.

அப்பொழுது ஒருவன் அவரை நோக்கி, ஆண்ட 23
வரே, சிலபேர் மாத்திரந்தான் இரட்சிக்கப்படுவார்களோ என்றான்.

அதற்கு அவர் சொன்னது, இடுக்கமான வாசலி 24
ன் வழியாய் (சீவனிற்) பிரவேசிக்க மிகவும் பிரயாசப்படுங்கள். என்னத்தினாலெனில் அநேகர் உட்பிரவேசிக்கத் தேடினாலும் பிரவேசிக்கமாட்டார்களென்று உங்களுக்குச்சொல்லுகிறேன்.

வீட்டெசமானெழுந்திருந்து கதவைப் பூட்டின 25
பின்பு நீங்கள் வெளியே நின்று கதவிலே தட்டி ஆண்டவரே, ஆண்டவரே எங்களுக்குத் திறக்கவேண்டுமென்றுகூப்பிடத் தொடங்குங்காலத்திலே அவர் நான் உங்களை அறியேனென்றும் நீங்கள் விட்டுவந்த இடத்தை அறியமாட்டேனென்றும் உங்களுடனே சொல்லும் பொழுது,

நீங்கள் உமக்கு முன்பாகப் போசனபானம் ப 26
ண்ணினோமே. நீர் எங்கள் வீதிகளிலே போதகம் பண்ணினீரே என்று சொல்லுவீர்கள்.

27 ஆனாலும் அவர் சொல்வது, உங்களை அறியேன்.
நீங்கள் விட்டுவந்த இடத்தை அறியேன். அக்கிரம
க்காரராகிய நீங்கள் எல்லாரும் என்னைவிட்டுப்போ
ங்களென்று சொல்வாரென்று உங்களுக்குச் சொல்
லுகிறேன்.
28 நீங்கள் ஆபிரகாம் ஈசாக்கு யாக்கோபு என்பவர்
களையுஞ் சகல தீர்க்கதரிசிகளையும் பராபரனுடைய
இராச்சியத்திலுள்ளவர்களென்றும் உங்களைப் புற
ம்பே தள்ளப்பட்டவர்களென்றுங் காணும்பொழு
து உங்களுக்கு அழுகையும் பற்கடிப்பும் உண்டா
யிருக்கும்.
29 அன்றியுங் கிழக்கிலும் மேற்கிலும் வடக்கிலுந்
தெற்கிலும் இருந்து சனங்கள் வந்து பராபரனு
டைய இராச்சியத்திற் பந்தியிருப்பார்கள்.
30 அப்பொழுது பிந்தினோர் முந்தினோராயிருப்பா
ர்கள். முந்தினோர் பிந்தினோராவார்களென்றார்.
31 அந்த நாளிலே சில பரிசேயர் அவரிடத்திற் போ
ய் ஏரோதே உம்மைக் கொலைசெய்ய மனதாயிருக்
கிறான். ஆகையால் நீர் இவ்விடத்தைவிட்டுப் போ
கவேண்டும் என்றார்கள்.
32 அவர்களுடனே அவர் சொன்னது, நீங்கள் போ
ய் இன்றைக்கும் நாளைக்கும் நான் பசாசுகளைத் து
ரத்தி ஆரோக்கியங்களைச் செய்து முடித்து மூன்
றாம்நாளில் நிறைவு அடைவேன்.
33 முக்கியமாக எருசலேமுக்குப் புறம்பே ஒரு தீர்
க்கதரிசி மடிந்துபோகிறது வழக்கமல்லாதபடியால
நான் இன்றைக்கும் நாளைக்கும் பின்வருகிற நாளி
லேயும் இவ்விடங்களில் நடக்கவேண்டியதாய் இரு
க்கின்றதென்று அந்த நரிக்குச்சொல்லுங்கள்.
34 எருசலேம்பட்டினத்தாரே, எருசலேம்பட்டின
த்தாரே, உங்களிடத்தில் அனுப்பப்பட்டவர்கள்

மேற் கல்லெறிந்து தீர்க்கதரிசிகளைக்கொலைசெய்கி
றவர்களே ஒரு கோழி தன் குஞ்சுகளைத் தன் சிறகு
களின்கீழே சேர்த்துக்கொள்ளுகிறவிதமாய் நான்
அநேகந்தரம் உங்களைச் சேர்த்துக்கொள்ள வேண்
டுமென்றிருந்தேன். நீங்கள் வரமாட்டோமென்றீ
ர்கள்.

(ஆதலால்) உங்கள் வாசஸ்தலம் பாழாக்கி விடப் 35
படும். அல்லாமலும் நீங்கள் பராபரனுடைய நாம
த்தினாலே வருகிறவர் தோத்திரஞ்செய்யப்படத்தக்
கவரென்று சொல்லுங் காலபரியந்தம் என்னைக் கா
ணாமலிருப்பீர்களென்றார்.

---

௰௪. அதிகாரம்.

ஒரு ஓய்வுநாளில் அவர் பரிசேயருக்குள்ளே த 1
லைவரானவர்களில் ஒருவனுடைய வீட்டிலே போச
னம்பண்ணும்படிக்குப் போகிறபொழுது,

பாண்டு வியாதியுள்ள ஒரு மனிதன் அவருக்கு 2
முன்பாக நிற்கையில் அவர்கள் அவரை நோக்கிப்
பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

அப்பொழுது இயேசுவானவர் நியாயசாஸ்திரிக 3
ளையும் பரிசேயரையும் நோக்கி ஓய்வுநாளிலே சு
வமாக்குகிறது நியாயமா என்றார்கள்.

அதற்கு அவர்கள் பேசாமலிருந்தார்கள். அப் 4
பொழுது அவர் அவனைப் பிடித்துச் சுகமாக்கி,

அனுப்பிப் பின்பு அவர்களுடனே சொன்னது, 5
உங்களில் எவனுணுந் தன் கழுதையாவது எருதை
யாவது ஓய்வு நாளில் ஒருகிணற்றிலே விழுந்தால்
உடனே அதைத் தூக்கிவிடானோவென்றார்.

அதற்கு மாறுத்தரஞ் சொல்ல அவர்கள் திராணி 6
யில்லாதிருந்தார்கள்.

7 விருந்துக்கு அழைக்கப்பட்டவர்கள் பந்தியில் முதலிடங்களைத் தெரிந்துகொண்டதை அவர் பார்த்து அவர்களுக்கு உவமையாய்ச் சொன்னது,

8 நீ ஒருவனாற் கலியாணத்துக்கு அழைக்கப்பட்டபொழுது பந்தியில் முதலிடத்தில் உளுக்காராதிரு. என்னத்தினாலென்றால் உன்னிலும் அதிக கனமுள்ளவன் அவனால் அழைக்கப்பட்டிருக்க,

9 உன்னையும அவனையும் அழைத்தவன் உன்னிடத்தில் வந்து இவருக்கு இடங்கொடும் என்று சொல்ல நீ வெட்கத்தோடே தாழ்ந்த இடத்திற் போயிருக்க வேண்டியதாயிருக்கும்.

10 ஆகையால் நீ அழைக்கப்பட்டபொழுது நீ போய்த் தாழ்ந்த இடத்தில் உளுக்காருவாயாக. அப்பொழுது உன்னை அழைத்தவன் உன்னிடத்தில் வந்து சிநேகிதனே, மேலான இடத்திற் போயிருமென்று சொல்லப் பந்தியிருக்கிறவர்களுக்கு முன்பாக உனக்குக் கனமுண்டாகும்.

11 அப்படிக்கு எவன் தன்னை உயர்த்துகிறானோ அவன் தாழ்த்தப்படுவான். எவன் தன்னைத் தாழ்த்துகிறானோ அவன் உயர்த்தப்படுவான் என்றார்.

12 அல்லாமலும் அவர் தம்மை விருந்துக்கு அழைத்தவனுடனே சொன்னது, நீர் பகல் விருந்தை அல்லது இராவிருந்தைப் பண்ணுகிறபொழுது உமது சிநேகிதரையுஞ் சகோதரரையும் மற்ற இனத்தாரையும் ஐசுவரியமுள்ள பிறரையும அழைக்கக் கூடாது. அழைத்தால் அவர்களும் உம்மை அழைப்பார்கள். அதினாலே உமக்குப் பதிற்பலனுண்டாகும்.

13 நீர் விருந்துபண்ணும்பொழுது ஏழைகள் ஊனர் சப்பாணிகள் குருடர் இப்படிப்பட்டவர்களை அழைப்பீராக.

அப்பொழுது அவர்கள் உமக்குப் பதிற்கொடுக் 14
கத் திராணியில்லாதபடியால் நீர் பாக்கியராயிருப்
பீர் நீதிமான்கள் உயிரோடெழுந்திருக்குங் கால
த்திலே உமக்குப் பதில் அளிக்கப்படும் என்றார்.

அவரோடே கூடப் பந்தியிருந்தவர்களில் ஒருவ 15
ன் இந்த வசனங்களைக் கேட்டபொழுது அவன் அ
வரை நோக்கிப் பராபரனுடைய இராச்சியத்திற்
போசனம்பண்ணுகிறவன் பாக்கியவானென்றான்.

அதற்கு அவர் சொன்னது, ஒரு மனிதன் பெரி 16
ய விருந்துபண்ணி,

அநேகரை அழைத்து விருந்து வேளையிலே த 17
ன் ஊழியக்காரனை நோக்கி, நீ அழைக்கப்பட்டவ
ர்களிடத்திற்குப் போய்ச் சகலமும் எத்தனமாயிற்
று. ஆகையால் வாருங்களென்று சொல்லென்று
அனுப்பினான்.

அப்பொழுது அவர்கள் எல்லாரும் போக்குச் 18
சொல்லத் தொடங்கினார்கள். ஒருவன் சொன்னது
ஒரு வயல்நிலத்தைக் கொண்டேன். நான் போய்
அதைப் பார்க்க அவசியமாயிருக்கின்றது. ஆகை
யால் எனக்கு மன்னிக்கவேண்டுமென்று உன்னை
வேண்டிக்கொள்ளுகிறேன் என்றான்.

வேறொருவன் சொன்னது, ஐந்தேர்மாடு கொ 19
ண்டேன். அவைகளை நான்போய்ச் சோதிக்கவே
ண்டும். ஆகையால் எனக்கு மன்னிக்கும்படிக்கு
உன்னை வேண்டிக்கொள்ளுகிறேன் என்றான்.

வேறொருவன் சொன்னது, பெண்ணை விவாகம் 20
பண்ணினேன். அதினாலே நான் வரக் கூடாதெ
ன்றான்.

பின்பு அந்த ஊழியக்காரன் வந்து அவைகளைத் 21
தன் எசமானுக்கு அறிவித்தான். அப்பொழுது வீ
ட்டெசமான் கோபம் அடைந்து தன் ஊழியக்கா

ரனை நோக்கி நீ சீக்கிரமாய்ப் பட்டணத்தின் தெருக்களிலும் வீதிகளிலும் போய்த் தரித்திரரையும் ஊனரையுஞ் சப்பாணிகளையுங் குருடரையும் இங்கே அழைத்துக்கொண்டு வாவென்றான்.

22 அந்தப்படி ஊழியக்காரன் அழைத்து வந்து ஆண்டவரே, நீர் கட்டளையிட்டபடி செய்தாயிற்று.

23 பின்னும் இடமுண்டென்றான். அப்பொழுது எசமான் ஊழியக்காரனுடனே சொன்னது, நீ வழிகளிலும் வேலிகள் அருகேயும் புறப்பட்டுப்போய் என் வீடு நிறைய வரும்படிக்குச் சனங்களை வருந்திக் கூட்டிக்கொண்டுவா

24 அழைக்கப்பட்டிருந்த அந்த மனிதரில் ஒருவராகிலும் என்னுடைய விருந்தை ருசிபார்ப்பதில்லையென்று உங்களுக்குச் சொல்லுகிறேனென்று சொன்னார்.

25 பின்பு அநேக சனங்கள் அவரோடே கூடப் பிரயாணமாய்ப் போகையில் அவர் திரும்பிப் பார்த்து அவர்களுடனே சொன்னதாவது,

26 ஒருவன் என்னிடத்தில் வந்துந் தன் தகப்பனையுந் தாயையும் மனைவியையும் பிள்ளைகளையுஞ் சகோதரரையுஞ் சகோதரிகளையுந் தன் சுய சீவனையும் பகையாவிட்டால் என் சீஷனாயிருக்கமாட்டான்.

27 அல்லாமலுந் தன் சிலுவைமரத்தைச் சுமந்துகொண்டு எனக்குப் பின்செல்லாதவன் என் சீஷனாயிருக்கமாட்டான்.

28 உங்களில் எவனாகிலும் ஒரு கோபுரத்தைக் கட்ட மனதாயிருந்தால் தான் அஸ்திபாரம் போட்டபின்பு அதை முடியக் கட்டுகிறதற்குத் திராணியில்லாமலிருக்கும்பொழுது,

29 அதைப் பார்க்கிறவர்கள் எல்லாரும் இந்த மனிதன் கட்டத்தொடங்கி முடிக்கிறதற்குத் திராணியி

ல்லையென்று தன்னைப் பரிகாசம் பண்ணாதபடிக்கு,
அவன் முன்பு உழுக்கார்ந்து அதைக் கட்டித் தீ 30
ர்க்கிறதற்குத் திராணியுண்டா இல்லையாவென்று அ
றியும்படி செல்லுஞ்செலவைக் கணக்குப் பாராம
லிருப்பானா?

அல்லது எந்த இராசாவானாலும் மற்றொரு இரா 31
சனுடனே யுத்தஞ்செய்யப்போகிறதற்கு முன்பு உ
ழுக்கார்ந்து தனக்கு விரோதமாய் இருபதினாயிரஞ்
சேவகரைக்கொண்டுவருகிறவனோடே பதினாயிரஞ்
சேவகரைக்கொண்டு எதிர்க்கக் கூடுமா?

கூடாதென்று அறிந்தால் அவன் தூரத்திலிருக்கை 32
யில் தானாபதிகளை அனுப்பிச் சமாதானத்துக்காகக்
கேட்டுக்கொள்ளும்படிக்கு (அப்படிச் செய்வான
ல்லவா?)

அதுபோல உங்களில் எவனானாலுந் தனக்குண்டா 33
ன எல்லாவற்றையும் வெறுத்துவிடாவிட்டால் என்
சீஷனாயிருக்கமாட்டான்.

உப்பானது நல்லதுதான். உப்பானது சாரமற் 34
றுப்போனால் எதினாலே அது சாரமாக்கப்படும்.

அது நல்லநிலத்திலாகிலும் எருவிலாகிலும் போ 35
டப்படத் தக்கதல்ல. அதைவெளியே கொட்டிப்
போடுவார்கள். கேட்கிறதற்குக் காதுள்ளவன் கே
ட்கக்கடவனென்றார்.

---

## ௰௫. அதிகாரம்.

அன்றியுஞ் சகல ஆயக்காரரும் பாவிகளும் அவ 1
ருடைய வசனங்களைக் கேட்கும்படிக்கு அவரிடத்
திற் சேர்ந்தார்கள்.

அப்பொழுது பரிசேயரும் வேதபாரகரும் 2
மொறுமொறுத்து இவர் பாவிகளை ஏற்றுக்கொண்
டு அவர்களோடே சாப்பிடுகிறாரென்றார்கள்.

3 அவர்களுடனே அவர் சொன்ன உவமையாவது,

4 உங்களில் யாவனாகிலுந் தனக்கு உடைமையான நூறு ஆடுகளில் ஒன்றை இழந்தால் தொண்ணூற்றொன்பது ஆடுகளையும் வனாந்தரத்தில் விட்டுப் போய் இழந்ததைக் கண்டுபிடிக்கும் பரியந்தந் தேடாமலிருப்பானா?

5 கண்டுபிடித்த பின்பு அவன் அதைச் சந்தோஷமாய்த் தன் தோழின்மேல் ஏற்றிக்கொண்டு வீட்டுக்கு வந்த பொழுது,

6 சிநேகிதரையும் அயலாரையுங் கூடவர அழைத்துக் காணாமற் போன என் ஆட்டைக் கண்டுபிடித்தேன். ஆகையால் என்னோடே கூடச் சந்தோஷப்படுங்களென்பானல்லவா!

7 அதுபோல மனந்திரும்ப அகத்தியப்படாத தொண்ணூற்றொன்பது நீதிமான்களிலும் மனந்திருப்புகிற ஒரே பாவியைக்குறித்துப் பரமண்டலத்திலுள்ளவர்களுக்குச் சந்தோஷமுண்டாகுமென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

8 அல்லது பத்துத் திராகுமாப் பணத்தையுடைய பெண் எவளாகிலும் ஒரு திராகுமாவை இழந்தால் * விளக்கைக்கொழுத்தி வீட்டைப் பெருக்கி அதைக் கண்டுபிடிக்கும் பரியந்தம் நன்றாய்த் தேடாமலிருப்பாளா?

9 கண்டுபிடித்த பின்பு அவள் சிநேகிதிகளையும் அயல் வீட்டுக்காரிகளையுங் கூடவரவழைத்து நானிழந்த திராகுமாவைக் கண்டுபிடித்தேன். ஆகையால் என்னோடேகூடச்சந்தோஷப்படுங்களென்பாளல்லவா?

10 அதுபோல மனந்திருப்புகிற ஒரே பாவியைக்கு

---

* திராகுமா ஒன்றிற்கு ஏறக்குறைய இரண்டு சின்னப்பணத் ஒப்பாயிருக்கும்.

றித்துப் பராபரனுடைய தூதருக்கு முன்பாகச் ச
ந்தோஷமுண்டாயிருக்கின்றதென்று உங்களுக்குச்
சொல்லுகிறேனென்றார்.

பின்னும் அவர் சொன்னதாவது, ஒரு மனிதனு 11
க்கு இரண்டு குமாரர் இருந்தார்கள்.

அவர்களில் இளையவன் தகப்பனை நோக்கித் தகப் 12
பனே, ஆஸ்தியில் எனக்கு வரும் பங்கைத் தரவே
ண்டுமென்றான். அந்தப்படி அவன் அவர்களுக்கு
ப் பொருளைப் பங்கிட்டான்.

சில நாளுக்குப் பின்பு இளைய மகன் எல்லாவற் 13
றையுஞ் சேர்த்துக்கொண்டு தூர தேசத்திற்குப் பி
ரயாணமாய்ப் போய் அங்கே கெட்டமார்க்கமாய்
ச் சீவனம்பண்ணித் தன் ஆஸ்தியை அழித்துப்போ
ட்டான்.

எல்லாவற்றையும் அவன் செலவழித்த பின்பு அ 14
த்தேசத்திலே மிகுந்த பஞ்சகால முண்டாயிற்று
அப்பொழுது அவனுக்குக் குறைவு வரத் தொடங்
கினபடியினாலே,

அவன் போய் அந்தத் தேசத்துக் குடிகளில் ஒ 15
ருவனைச் சேர்ந்துகொண்டான். அந்தக் குடியான
வன் அவனைத் தன் வயல்களிலே பன்றிகளை மேய்
க்கும்படிக்கு அனுப்பினான்.

அப்பொழுது பன்றிகள் தின்கிற தவிடுகளினாலே 16
தன் வயிற்றை நிரப்ப ஆசைப்பட்டான். அவற்
றையும் ஒருவனும் அவனுக்குக் கொடுக்கவில்லை.

அப்படியிருக்குங் காலத்தில் அவன் புத்தியடை 17
ந்து சொன்னதாவது, ஆ! என் தகப்பனிடத்திலே
எத்தனை கூலிக்காரர் மிகுந்த உணவை உடையவர்
களாயிருக்கிறார்கள். நான் இங்கே பசியினாலே செ
ட்டுப்போகிறேன்.

நான் எழுந்து என் தகப்பனிடத்துக்குப் போ 18

ய்த் தகப்பனே, தேவனுக்கும் உமக்கும் விரோத
மாய்ப் பாவஞ்செய்தேன்.
19 இதுமுதல் நான் உம்முடைய குமாரனென்று
அழைக்கப்படுவதற்கு அபாத்திரனாயிருக்கிறேன்.
உம்முடைய கூலிக்காரரில் ஒருவனைப்போல என்
னை வைத்துக்கொள்ளுமென்று சொல்லவேண்டுமெ
ன்று எண்ணி,
20 எழுந்து புறப்பட்டுத் தன் தகப்பனிடத்திற்குப்
போனான். அப்பொழுது அவன் தூரமாயிருக்கை
யில் தகப்பன் அவனைக்கண்டு உருக்கமாய் இரங்கி
ஓடிவந்து அவனுடைய கழுத்தைக்கட்டிக்கொண்
டு அவனை முத்தஞ்செய்தான்.
21 குமாரன் அவனை நோக்கித் தகப்பனே, தேவ
னுக்கும் உமக்கும் விரோதமாகப் பாவஞ்செய்தே
ன். இதுமுதல் உம்முடைய குமாரனென்று அழை
க்கப்படுவதற்கு நான் பாத்திரனல்லவென்று சொ
ன்னபொழுது,
22 தகப்பன் தன்வேலைக்காரரை நோக்கி நீங்கள்(போ
ய்) முக்கியமான வஸ்திரத்தைக் கொண்டுவந்து இ
வனுக்கு உடுத்தி இவனுடைய கைக்குமோதிரத்தை
யுங் கால்களுக்குப் பாதரட்சைகளையுங் கொடுத்து,
23 பின்பு கொழுத்த கன்றைக் கொண்டுவந்து அடி
த்துச்சமையுங்கள்.
24 என் குமாரனாகிய இவன் மரித்தான். மறுபடியு
ம் உயிரோடிருக்கிறான் இவன் காணமற்போனான்.
இப்பொழுது காணப்பட்டான். ஆகையால் நாம் பு
சித்து மகிழ்ச்சியாயிருக்கக்கடவோமென்றான். அ
ந்தப்படி அவர்கள் சந்தோஷிப்படத் தொடக்கினா
ர்கள்.
25 அவனுடைய மூத்தகுமாரன் வயலில் இருந்தான்.
அவன்திரும்பி வீட்டுக்குச்சமீபமாய் வந்தபொழுது

கீதவாத்தியத்தையும் நடனக்களிப்பையுங் கேட்டு,
வேலைக்காரரில் ஒருவனை அழைத்து இதென்ன 26
வென்று விசாரித்தான்.
வேலைக்காரன் அவனை நோக்கி உன் சகோதரன்வ 27
ந்தான். உன் தகப்பன் அவனைச் சுகத்தோடே திரு
ம்பப் பெற்றுக்கொண்டபடியினாலே கொழுத்தக
ன்றை அடிப்பித்தானென்றான்.
அப்பொழுது அவன் கோபம் அடைந்து உள் 28
ளேபோக மனதில்லாதிருந்தான். ஆதலால் தகப்ப
ன் வெளியே வந்து அவனை மிகவும் வேண்டிக்கொ
ண்டு அழைத்தான்.
அவன் தகப்பனுக்குப் பிரத்தியுத்தரமாகச் சொ 29
ன்னது, இவ்வளவு வருஷம் நான் உமக்கு ஊழியஞ்
செய்து உமது கற்பனையை ஒருக்காலும் மீறி நட
க்கவில்லை, அப்படியிருந்தும் நான் என் சிநேகித
ரோடே மகிழ்ச்சியாயிருக்கும்படிக்கு ஒருக்காலும்
நீர் ஒரு ஆட்டுக்குட்டியை எனக்குக் கொடுக்கவில்
லையே.
உம்முடைய பொருள்களை வேசிகளோடே பட்சி 30
த்த உமது குமாரனாகிய இவன்வந்தபொழுது கொ
ழுத்த கன்றை இவனுக்காக அடிப்பித்தீரென்றான்.
அதற்குத் தகப்பன் சொன்னது, மகனே நீ எப் 31
பொழுதும் என்னோடிருக்கிறாய். அல்லாமலும் எ
னக்குண்டான யாவும் உன்னுடையவைகளாயிருக்கி
ன்றன
உன் சகோதரனாகிய இவன் மரித்தான். மறுபடியு 32
ம் உயிரோடிருக்கிறான்; காணாமற்போனான். (இப்
பொழுது) காணப்பட்டான். ஆனபடியினாலே
நாம் மகிழ்ச்சியாகிக் களிப்படைய வேண்டுமேயெ
ன்று சொன்னானென்றார்.

---

௰௬. அதிகாரம்.

1 அன்றியும் அவர் தம்முடைய சீஷரோடு சொன்
னதாவது, ஐசுவரியமுள்ள மனிதனுக்கு ஒரு உக்கி
ராணக்காரனிருந்தான். அவன் எசமானுடைய ஆ
ஸ்திகளை அழிக்கிறதாக அவனுக்கு அறிவித்தார்கள்.
2 அப்பொழுது எசமான் அவனை அழைத்து உன்
னைக் குறித்து நான் இப்படிக் கேள்விப்பட்டிருக்கி
றேன். நீ இனிமேல் உக்கிராணக்காரனாயிருக்கக் கூ
டாது. ஆகையால் உன் உக்கிராணக் கணக்கைக்
கொடுவென்றான்.
3 அப்பொழுது உக்கிராணக்காரன் தனக்குள்ளே
எண்ணிக்கொண்டதாவது, என் எசமான் உக்கிரா
ணவிசாரிப்பை என்னிலிருந்து எடுத்துக்கொள்ளு
கிறபடியினாலே என்னசெய்யலாம்? (நிலம்) கொ
த்துகிறதற்குப் பெலனில்லை. இரக்க வெட்கமாயி
ருக்கின்றது.
4 உக்கிராண விசாரிப்பை விட்டுத் தள்ளப்படும்
பொழுது என்னைத் தங்கள் வீடுகளிற் சேர்த்துக்
கொள்ளுகிறதற்கான (சிநேகிதர்கள்) உண்டாகும்
படிக்குச் செய்ய வேண்டிய வகை தெரியவந்த
தென்று எண்ணி,
5 தன் எசமானிடத்திற் கடன்பட்டவர்களை ஒருவ
னொருவனாக அழைத்து முதலாவது வந்தவனைநோ
க்கி நீ என் எசமானிடத்திற்பட்ட கடன் எவ்வள
வு என்றான். அதற்கு அவன் நூறுகுடம் எண்ணெ
ய் என்றான்.
6 அப்பொழுது உக்கிராணக்காரன் அவனை நோக்
கி நீ உன் சீட்டை எடுத்துச் சீக்கிரமாய் உட்கார்
ந்து ஐம்பதென்றெழுதென்றான்.
7 பின்பு அவன் வேறொருவனை நோக்கி நீ பட்ட

டன் எவ்வளவு என்றான். அதற்கு அவன் நூறுகல
ன் கோதும்பையென்றான். அப்பொழுது உக்கி
ராணக்காரன் அவனை நோக்கி நீ உன் சீட்டையெடு
த்து எண்பதென்று எழுதென்றான்.
அநீதியுள்ள உக்கிராணக்காரன் விவேகமாய்ச் 8
செய்தபடியினாலே எசமான் அவனைப் புகழ்ந்தான்
இவ்விதமாய் ஒளியின் பிள்ளைகளிலும் இப்பிரபஞ்
சத்தின் பிள்ளைகள் தங்கள் சந்ததியில் அதிகவிவேகி
களாயிருக்கிறார்கள்.
நானும் உங்களுக்குச் சொல்லுகிறதாவது, நீங்க 9
ள் மாளும்பொழுது உங்களை நித்தியமானவீடுகளிற்
சேர்த்துக்கொள்ளும்படிக்குக் கபடமுள்ள லவுகீ
கப்பொருள்களால உங்களுக்காகச் சிநேகிதரைச்
சம்பாதியுங்கள்.
கொஞ்சத்திலே உண்மையுள்ளவன் அநேகத்தி 10
லேயும் உண்மையாயிருப்பான். கொஞ்சமாய் அ
நீந்செய்கிறவன் அநேகமாயும் அநீதிசெய்வான்.
அப்படியிருக்க, நீங்கள் கபடமுள்ள லவுகீகப் 11
பொருளிலே உண்மையில்லாமலிருந்தால் மெய்யா
ன பொருள்களை உங்களுக்கு யார் நம்பிக்கையோ
டே ஒப்புவிப்பார்கள்?
அல்லாமலும் நீங்கள் மற்றொருவனுடையதை 12
உண்மையில்லாமையாய் நடத்தினால் உங்களுக்குச்
சொந்தமாக எதையாகிலும் ஆர் உங்களுக்குக் கொ
டுப்பார்கள்?
எந்த வேலைகாரனாலும் இரண்டு எசமான்களு 13
க்கு அடிமைசெய்யமாட்டான். ஒருவனைப்பகைத்
து மற்றவனைச் சிநேகிப்பான். அல்லது ஒருவனைப்
பற்றிக்கொண்டு மற்றவனை அசட்டைபண்ணுவான்.
நீங்கள் பராபரனுக்கும் லவுகீகப் பொருளுக்கும்
அடிமையாயிருக்கமாட்டீர்களென்றார்.

14 பணத்தின்மேல் ஆசையுள்ளவர்களாகிய பரிசே
யரும் இந்த வசனங்கள் யாவையுங் கேட்டு அவரை
க் குறித்துப் பரிகாசம்பண்ணினார்கள்.
15 அப்பொழுது அவர் அவர்களை நோக்கி நீங்கள்
மனிதர்கள் முன்பாக உங்களை நீதிமான்களென்று
காண்பிக்கிறீர்கள். ஆனாலும் பராபரன் உங்கள் இ
ருதயங்களை அறிந்திருக்கிறார். மனிதருக்குள்ளே
மேன்மையாய் எண்ணப்பட்டிருக்கின்றது பராப
ரனுக்கு முன்பாக அருவருப்பாயிருக்கின்றது.
16 நியாயப்பிரமாணமுந் தீர்க்கதரிசிகளுடைய பிர
மாணங்களும் யோவான்வரைக்குஞ் சென்றன. அ
து முதற் பராபரனுடைய ஆளுகைசுவிசேஷமாய்
அறிவிக்கப்பட்டுவருகின்றது. யாவருந் வலுமை
யாய் அதற்கு உட்படுகிறார்கள்.
17 வானமும் பூமியும் ஒழிந்துபோகிறது எளிதாயி
ருந்தாலும் வேதப்பிரமாணத்தில் ஒரு எழுத்தின்
உறுப்புங் கெட்டுப்போகாது.
18 தன்மனைவியைத் தள்ளி வேறொருத்தியை விவா
கம்பண்ணுகிறவன் விபசாரஞ் செய்கிறான். புருஷ
னாலே தள்ளப்பட்டவளை விவாகம்பண்ணுகிறவனு
ம் விபசாரஞ் செய்கிறான்.
19 அன்றியும் ஐசுவரியமுள்ள ஒரு மனிதன் இருந்தா
ன். அவன் இரத்தாம்பரமும் மெல்லிசான உடை
யுந்தரித்து அனுதினமுஞ் சம்பிரமமாய் வாழ்ந்து
கொண்டிருந்தான்.
20 அல்லாமலும் இலாசரு என்னப்பட்ட ஒரு தரித்
திரன் இருந்தான். அவன் பருக்கள் நிறைந்த தேக
முள்ளவனாய் அந்த ஐசுவரியவானுடைய வாசலின்
அருகே கிடந்து அவனுடைய போசனபாத்திரத்தி
லிருந்து விழும் உச்சிட்டங்களாலே தன்பசியை ஆ
ற்ற ஆசையாயிருந்தான்.

அதுவுமல்லாமல் நாய்கள் வந்து அவனுடைய ப 21
ருக்களை நக்கும்.

பின்பு அந்தத் தரித்திரனானவன் மரித்துத் தேவ 22
தூதரால் ஆபிரகாமினுடைய மடியிலேகொண்டு
போய் விடப்பட்டான். ஐசுவரியவானும் மரித்து
அடக்கம்பண்ணப்பட்டான்.

பின்பு அவன் நரகத்திலே வேதனைப்படுகிறபொ 23
ழுது தன் கண்களை உயர்த்தித் தூரத்திலே ஆபிரகா
மையும் அவனுடைய மடியிலே இலாசருவையும்
கண்டு,

தகப்பனாகிய ஆபிரகாமே, இந்தச் சுவாலையிலே 24
யிருந்து வேதனைப்படுகிறேன். ஆகையால் நீர் என்
மேல் இரங்கி இலாசரு தன் விரலின் நுனியைத் த
ண்ணீரிலே தோய்த்து என்னுடைய நாவைக் குளி
ரப்பண்ணும்படிக்கு அவனை அனுப்பவேண்டுமெ
ன்று கூப்பிட்டான்.

அதற்கு ஆபிரகாம் சொன்னது, மகனே, நீ பூ 25
மியிலே உயிரோடிருந்தகாலத்திலே உனக்கு (இஷ்
டமான) நன்மைகளைப் பெற்றுக்கொண்டாயே. இ
லாசருவும் அப்படித் தீமைகளைப்பெற்றுக்கொண்
டான். அதை நினைத்துக்கொள். இப்பொழுது இ
வன் தேற்றப்படுகிறான். நீ வேதனைப்படுகிறாய்.

அதுவுமல்லாமல் இவ்விடத்தைக் கடந்து உங்க 26
ளிடத்துக்கு வரவும் அல்லது அவ்விடத்தைக்கடந்
து எங்களிடத்துக்கு வரவும் மனதுள்ளவர்களுக்கு
க் கூடாதபடிக்கு எங்களுக்கும் உங்களுக்கும் நடு
வே பெரும் பிளப்பு உண்டாக்கப்பட்டிருக்கின்ற
தே என்றான்.

அதற்கு அவன் சொன்னது, தகப்பனே, அப்ப 27
டியானால் (பூமியிலே) எனக்கு ஐந்துபேர் சகோத
ரருண்டு. அவர்களும் வேதனையுள்ள இவ்விடத்து

க்கு வாராதபடிக்கு இவன் போய் அவர்களுக்கு (இ
தைக் குறித்து) சாட்சி கொடுக்கும்பொருட்டாய்,
28 இவனை என் தகப்பனுடைய வீட்டுக்கு அனுப்பு
மென்று உம்மை வேண்டிக்கொள்ளுகிறேனென்
றான்.
29 அதற்கு ஆபிரகாஞ் சொன்னது, அவர்களுக்கு
மோசேயுந் தீர்க்கதரிசிகளுமுண்டே. அவர்களுக்
குச் செவிகொடுக்கலாமே. என்றான்.
30 அவன் சொன்னது, அப்படியல்ல தகப்பனாகிய
ஆபிரகாமே, மரித்தோரிலிருந்து ஒருவன் அவர்களி
டத்துக்குப் போனால் மனந் திருப்புவார்களென்
றான்.
31 அதற்கு அவன் சொன்னது, அவர்கள் மோசே
க்கும் தீர்க்கதரிசிகளுக்குஞ் செவிகொடாமலிருந்
தால் மரிதத்தோரிலிருந்து ஒருவன் எழுந்து போனா
லுஞ் சம்மதிக்கமாட்டார்களென்று சொன்னானெ
ன்றார்.

---

## ௰௭. அதிகாரம்.

1 அன்றியும் அவர் தமது சீஷருடனே சொன்ன
தாவது, குற்றஞ்செய்வதற்கான காரணங்கள் நட
வாமலிருக்க[illegible] கூடாதகாரியந்தான். ஆனாலும்
ஐயோ! அவைகளைச் செய்கிறவனுக்கு வேதனைவ
ரும்.
2 அவன் இந்தச் சிறியரில் ஒருவன் குற்றஞ்செய்கி
றதற்குக் காரணமாயிராதபடிக்கு அவனுடைய க
ழுத்திலே எந்திரக்கல்லைக் கட்டிச் சமுத்திரத்திலே
அமிழ்த்தினால் அவனுக்கு நலமாயிருக்கும்.
3 நீங்கள் சாவதானமாயிருக்கக்கடவீர்கள். பிற
னொருவன் உனக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்

[illegible]னால் அவனைக் கடிந்துகொள். அவன் மன
ஸ்தாபப்பட்டால் அவனுக்கு மன்னிப்பாயாக.
அவன் ஒருநாளிலே ஏழுதரம் உனக்கு விரோத 4
மாய்ப் பாவஞ்செய்து ஒருநாளிலே ஏழுதரம் உன்
னிடத்தில் வந்து மனஸ்தாபப்படுகிறேனென்று
சொன்னால் அவனுக்கு மன்னிப்பாயாகவென்றார்.
அப்பொழுது அப்போஸ்தலர் கர்த்தரை நோக் 5
கி விசுவாசம் எங்களுக்குள்ளே பெருகும்படி செ
ய்யுமென்றார்கள்.
அதற்குக் கர்த்தர் சொன்னது, கடுகு விதை அ 6
வ்வளவு விசுவாசம் உங்களுக்கு உண்டாயிருந்தால்
நீங்கள் இந்தக் காட்டத்திமரத்தை நோக்கி வேரு
டனே பிடுங்கப்பட்டுக் கடலில் நாட்டப்படுவாயா
க என்று சொல்ல, அது உங்களுக்குக் கீழ்ப்படியும்.
அன்றியும் உங்களில் எவனாகிலும் உழுதலையாவ 7
து மேய்த்தலையாவது செய்கிற (தன்) வேலைக்கா
ரனை வயலிலிருந்து வரக் (காணும்) பொழுது நீ
போய்ச் சாப்பிடுவென்று உடனே அவனுக்குச்
சொல்லுவான்?
நீ எனக்காக இராப்போசனத்தை எத்தனம்ப 8
ண்ணிக் கச்சையைக் கட்டிக்கொண்டு நான் போசன
பானம்பண்ணுமளவும் எனக்கு ஊழியஞ் செய்.
பின்பு நீ போசன பானம்பண்ணலாமென்றல்லவா
அவனுடனே சொல்லுவான்?
அந்த வேலைக்காரன் தனக்குக் கட்டளையிட்ட 9
வைகளைச் செய்கிறபடியினாலே எசமான் அவனை
உபசாரஞ்செய்வானா? அப்படிச் செய்யமாட்டா
னென்று நினைக்கிறேன்.
அப்படிப்போல நீங்களும் உங்களுக்குக் கட்ட 10
ளையிடப்பட்ட யாவையுஞ் செய்த பொழுதும் நா
ங்கள் உபசாரம் பெற்றுக்கொள்ளுதற்கான ஊழி

பக்காரரல்ல. எங்களுக்குக் கட்டளையிடப் பட்ட
தைமாத்திரஞ் செய்தோமேயென்று சொல்லுவீர்
களாகவென்றூர்.
11 அன்றியும் அவர் எருசலேமுக்குப் பிரயாணமா
யிப் போகையிற் சமாரியா நாட்டின் வழியாயுங் க
லிலேயா நாட்டின் வழியாயும் நடந்து,
12 ஒரு கிராமத்திற் பிரவேசிக்கிற பொழுது குஷ்
டரோகமுள்ள பத்துப்பேர் அவருக்கு எதிராக வ
ந்து தூரத்திலே நின்று,
13 இயேசுவே, ஐயரே, எங்கள்மேல் இரங்குமென்
று கூப்பிட்டார்கள்.
14 அவர்களை அவர் கண்டு நீங்கள் போய் உங்களை
ஆசாரியருக்குக் காண்பியுங்களென்றூர். அந்தப்ப
டி அவர்கள் போகையிற் சுத்தமானூர்கள்.
15 அப்பொழுது அவர்களில் ஒருவன் தான் ஆரோ
க்கியம் அடைந்ததைக் கண்டு,
16 திரும்பி மிகுந்த சத்தத்துடனே பராபரனைத்
துதித்து அவருடைய பாதத்தின் அருகே சாஷ்டா
ங்கமாய் விழுந்து அவருக்குத் தோத்திரஞ் செலு
த்தினன்.
17 அவன் சமா[illegible] தேசத்தான். அப்பொழுது
இயேசுவான[illegible] சொன்னது, பத்துப்பேருமல்ல
வோ சுத்த[illegible]. ஒன்பதுபேரெங்கே?
18 பராபரனுக்குத் துதியைச் செலுத்தும்படிக்கு
இந்த அந்நியனே ஒழிய மற்றொருவனுந் திரும்பி
வரவில்லையாவென்று சொல்லி,
19 அவனை நோக்கி நீ எழுந்துபோ. உன் விசுவாச
ம் உன்னை இரட்சித்ததென்றூர்
20 பராபரனுடைய ஆளுகை எப்பொழுது வரு
மென்று பரிசேயர் அவரிடத்தில் விசாரித்தபொ
ழுது அவர் அவர்களுக்கு மறுமொழியாகச் சொ

ன்னது, பராபரனுடைய ஆளுகை வேடிக்கைப் பி
ரசித்தமாக வாராது.

இதோ இங்கேயென்றும் அதோ அங்கேயென் 21
றுஞ் சொல்லமாட்டார்கள். பராபரனுடைய ஆ
ளுகை உங்களுக்குள்ளிருக்கின்றதே என்றார்.

பின்னுஞ் சீஷருடனே அவர் சொன்னது, மனி 22
தகுமாரனுடைய நாட்களில் ஒன்றைக் காணும்படி
க்கு நீங்கள் ஆசைப்படுங் காலம் வரும். அதைக்
காணுமலிருப்பீர்கள்.

அப்பொழுது சிலர் உங்களை நோக்கி இதோ இ 23
ங்கே இருக்கிறரென்றும் அதோ அங்கேயிருக்கிற
ரென்றுஞ் சொல்லுங் காலத்தில் நீங்கள் புறப்படா
மலும் பின் செல்லாமலுமிருங்கள்.

மின்னுனது வானத்தின் ஒரு பக்கத்திலிருந்து ம 24
ற்றொரு பக்கம்வரைக்கும் பிரகாசிக்கிறதுபோல
மனிதனுடைய குமாரன் தன்னுடைய நாளில் இரு
ப்பார்

அதற்கு முன்பு அவன் அநேகம்[illegible]டுகளை அனு 25
பவித்து இந்தச் சந்ததியினாலே தள்ளப்படவேண்
டியிருக்கின்றது.

நோவாவின் நாட்களில் நடந்த[illegible]போல மனித 26
குமாரனுடைய நாட்களிலும் நட[illegible]ம்.

நோவா பேழைக்குட் பிரவேசி[illegible]ள்வரைக்கு 27
ஞ் சனங்கள் போசனபானம்பண்ணியும் பெண்
கொண்டும் பெண்கொடுத்தும் வந்தார்கள். அந்
நாளிலே சலப்பிரளயம் வந்து எல்லாரையும் அழி
த்தது.

உலோத்தினுடைய நாட்களில் நடந்ததுபோல 28
வும் நடக்கும், சனங்கள் போசனபானம்பண்ணி
யும் பொருள்களைக் கொண்டும் விற்றுஞ் செடிகளை
நாட்டியும் (வீடுகளைக்) கட்டியும் வந்தார்கள்.

29 உலோத்து என்பவன் சோதோமூரைவிட்டுப் புறப்பட்டநாளிலே வானத்திலிருந்து அக்கினியுங் கந்தகமும் பெய்து எல்லாரையும் அழித்தது.

30 மனிதனுடைய குமாரன் வெளிப்படும் நாளில் அப்படியேயிருக்கும்.

31 அந்தநாளிலே வீட்டின்மேலிருப்பவன் வீட்டுக்குள்ளிருக்கிற தன் பண்டங்களை எடுத்துக்கொண்டு போகும்படிக்கு இறங்காமற் போகக்கடவன். அன்றியும் வயலிலிருப்பவன் பின்னிட்டுத் திரும்பாமற் போகக்கடவன்.

32 உலோத்தினுடைய மனைவியை நினையுங்கள்.

33 எவனாகிலுந் தன் சீவனை இரட்சித்துக்கொள்ளத் தேடினால் அதை இழந்துபோவான். எவனாகிலும் அதை இழந்தால் அதைக் காத்துக்கொள்ளுவான்.

34 அந்த இராத்திரியில் ஒரே படுக்கையின்மேற் கிடக்கும் இரண்டுபேரில் ஒருவன் பிடித்துக்கொள்ளப்படுவான் மற்றவன் விட்டுவிடப்படுவான்.

35 மாவை அரைக்கும் இரண்டு பெண்களில் ஒருத்தி பிடித்துக்கொள்ளப்படுவாள், மற்றவள் விட்டுவிடப்படுவாள்.

36 வயலிலிருக்கும் இரண்டுபேரில் ஒருவன் பிடித்துக்கொள்ளப்படுவான், மற்றவன் விட்டுவிடப்படுவானென்று உங்களுக்குச் சொல்லுகிறேனென்று சொன்னபொழுது,

37 அவர்கள் அவரை நோக்கி ஆண்டவரே, எங்கே என்றார்கள். அதற்கு அவர் சொன்னது, பிணம் எங்கேயோ அங்கே கழுகுகள் சேருமென்றார்.

---

௰௮. அதிகாரம்.

அன்றியும் அவர்கள் சோர்ந்துபோகாமல் எப் 1
பொழுதுஞ் செபம்பண்ண வேண்டுவதைக் குறித்
து அவர் அவர்களுக்குச் சொன்ன, உவமையாவது,

ஒரு பட்டினத்திலே ஒரு நியாயாதிபதி பராபர 2
னுக்குப் பயப்படாமலும் மனிதரை எண்ணாமலு
ம் இருந்தான்.

அல்லாமலும் அந்தப்பட்டினத்திலே ஒரு கைம் 3
பெண்ணிருந்தாள். அவள் அவனிடத்திற் போய்
எனக்கு விரோதியானவனிடத்திற் பழிவாங்க வே
ண்டுமென்றாள்.

அவன் அநேக நாள் மனதில்லாதிருந்தான். பி 4
ன்பு அவள் அவனிடத்தில் அதிகமாய்க் கேட்டபடி
யினாலே அவன் தனக்குள்ளே எண்ணினது, நான்
பராபரனுக்குப் பயப்படாமலும் மனிதரை எண்
ணாமலுமிருந்தும்,

இந்தக் கைம்பெண் என்னைத் தொந்தரவு பண் 5
ணுகிறபடியால் நான் இவளுக்காகப் பழிவாங்கவே
ண்டும். இல்லாவிட்டால் இவள் எப்பொழுதும்
வந்து என்னை வருத்தப்படுத்துவாளென்று எண்ணி
னானென்று கர்த்தர் சொல்லி,

பின்பு அநீதியுள்ள அந்த நியாயாதிபதி சொன் 6
னதைச் சிந்தியுங்கள்.

அந்தப்படி பராபரன் தாந் தெரிந்துகொண்டவ 7
ர்களைக் குறித்துத் தாமதித்துத் தம்மை நோக்கி இ
ரவும் பகலுங் கூப்பிடுகிற அவர்களுக்காகப் பழிவா
ங்காமலிருப்பாரா?

சீக்கிரத்தில் அவர்களுக்காகப் பழிவாங்குவாரெ 8
ன்று உங்களுக்குச் சொல்லுகிறேன். ஆகிலும் ம
னிதனுடைய குமாரன் வரும்பொழுது பூமியிலே

விசுவாசத்தைக் காண்பாரோவென்றார்.
9 அன்றியுந் தங்களை நீதிமான்களென்று நம்பி மற்
றவர்களை அற்பமாயெண்ணின சிலருக்கு அவர்
சொன்ன உவமையாவது,
10 இரண்டு மனிதர் செபம்பண்ணும்படிக்குத் தே
வாலயத்திற்குப் போனார்கள். அவர்களில் ஒருவ
ன் பரிசேயன். மற்றவன் ஆயக்காரன்.
11 பரிசேயனானவன் தனித்து நின்று பண்ணின
செபமாவது, பராபரனே, நான் பறிகாரர் அநீதர்
விபசாரர் இப்படிப்பட்ட மற்ற மனிதரைப்போ
லவும் இந்த ஆயக்காரனைப்போலவும் இராதவனா
படியினாலே உமக்குத் தோத்திரஞ் செலுத்துகி
றேன்.
12 வாரத்துக்குள்ளே இரண்டுதரம் உபவாசிக்கிறே
ன். எனக்குண்டான யாவற்றிலும் பத்திலொன்றை
ச் செலுத்துகிறேனென்றான்.
13 பின்பு ஆயக்காரன் தூரமாய் நின்று தன் கண்க
ளையும் வானத்துக்கு உயர்த்தத் துணியாமல் தன்
மார்பிலே அடித்துக்கொண்டு பராபரனே பாவி
யாகிய என்மேல் இரக்கமாய் இருமென்றான்.
14 அவனல்ல இவனே நீதிமானாக்கப்பட்டவனாய்த்
தன் வீட்டுக்குத் திரும்பிப்போனானென்று உங்களு
க்குச் சொல்லுகிறேன். தன்னை உயர்த்துகிறவன்
தாழ்த்தப்படுவான். தன்னைத் தாழ்த்துகிறவனே
உயர்த்தப்படுவானென்றார்.
15 பின்பு குழந்தைகளை அவர் தொடும்படிக்கு அவ
ரிடத்திற்கொண்டுவந்தார்கள். சீஷர் அதைக் கண்
டு அவர்களை அதட்டினார்கள்.
16 இயேசுவானவர் அவைகளைக் கொண்டுவரும்படி
கட்டளையிட்டுச் சொன்னது, பிள்ளைகள் என்னிடத்
தில் வருகிறதற்குத் தடைபண்ணாமல் இடங்கொடு

ங்கள். பராபரனுடைய இராச்சியம் அப்படிப்ப
ட்டவர்களை உடையதே.
எவனாகிலும் பிள்ளையைப் போலப் பராபரனு 17
டைய இராச்சியத்தை ஏற்றுக்கொள்ளாவிட்டால்
அதிற் பிரவேசிக்கமாட்டானென்றார்.
அப்பொழுது தலைவனொருவன் அவரை நோக்கி 18
நல்லபோதகரே, நித்திய சீவனைச் சுதந்தரித்துக்கொ
ள்ளும்படிக்கு நான் என்ன செய்யவேண்டுமென்
று கேட்டான்.
அதற்கு இயேசுவானவர் சொன்னது, நீர் என்னை 19
நல்லவனென்று ஏன் சொல்லுகிறீர்? பராபரனொரு
வரே அல்லாமல் மற்றொருவனும் நல்லவனல்லவே.
விபசாரம்பண்ணாதிருப்பாயாக. கொலைசெய்யா 20
திருப்பாயாக. களவுசெய்யாதிருப்பாயாக. பொ
ய்ச்சாட்சி சொல்லாதிருப்பாயாக. உன் தகப்பனை
யும் உன் தாயையும் கனம்பண்ணுவாயாகவென்று
சொல்லுகிற கற்பனைகளை அறிந்திருக்கிறீரேயென்
றார்.
அதற்கு அவன் அவையெல்லாம் என் சிறுவயது 21
முதற் கைக்கொண்டிருக்கிறேன் என்றான்.
இயேசுவானவர் அதைக்கேட்டு அவனுடனே 22
சொன்னது, பின்னும் ஒன்றைநீர் செய்யவேண்டி
யதாயிருக்கின்றது. உமக்கு உண்டானவைகளை எல்
லாம் நீர் விற்றுப் பரமண்டலத்திலே உமக்குப்
பொக்கிஷமுண்டாயிருக்கும்படிக்குத் தரித்திரரு
க்குப்பங்கிட்டுக் கொடுத்துப் பின்பு வந்து எனக்
குப் பின்செல்லவேண்டுமென்றார்.
அவன் மிகுந்த ஐசுவரியவானானபடியினாலே அ 23
ந்த வசனத்தைக் கேட்டபொழுது மிகுந்த துக்க
ம் அடைந்து (போனான்.)
அவன் மிகுந்த துக்கம் அடைந்ததை இயேசுவா 24

னவர் கண்டு சொன்னதாவது, ஆஸ்திகளையுடைய
வர்கள் பராபரனுடைய இராச்சியத்திற் பிரவேசி
ப்பது மிகவும் அரிது.
25 ஒட்டகமானது ஒரு ஊசியின்காதிலே நுழைவது
எளிதானுல் ஐசுவரியவான் பராபரனுடைய இராச்
சியத்திற் பிரவேசிக்கிறதும் எளிதாயிருக்குமென்
ருர்.
26 அதைக் கேட்டவர்கள் சொன்னது, அப்படியா
ஞல் யார் இரட்சிக்கப்படுவார்கள் என்ருர்கள்.
27 அதற்கு அவர் சொன்னது, மனிதரால் ஆகமா
ட்டாதவைகள் பராபரனலே ஆகுமென்ருர்.
28 அப்பொழுது பேதுரு அவரை நோக்கி இதோ
நாங்கள் எல்லாவற்றையும் விட்டு உமக்குப் பின்
சென்று வருகிறேமென்ருன்.
29 அதற்கு அவர் சொன்னது, பராபரனுடைய இ
ராச்சியத்தின் நிமித்தமாக வீட்டையாவது தாய் த
கப்பன் மாரையாவது சகோதரரையாவது மனை
வியையாவது பிள்ளைகளையாவது விட்ட யாவரும்,
30 இம்மையிலே அதிக மடங்காயும் மறுமையிலே
நித்திய சீவனையும் அடையாமல் இருப்பதில்லையெ
ன்ருர்.
31 பின்பு அவர் பன்னிருவரைச் சேர்த்துக்கொண்
டு அவர்களுடனே சொன்னது இதோ எருசலேமு
க்குப்போகிறேம். அங்கே மனிதனுடைய குமா
ரனைக் குறித்துத் தீர்க்கதரிசிகளால் எழுதப்பட்ட
யாவும் நிறைவேறும்.
32 எப்படியெனில் அவன் புறத்தேசத்தாருக்கு ஒ
ப்புக்கொடுக்கப்பட்டுப் பரியாசமும் நிந்தையும்
அடைந்து துப்பப்படுவான்.
33 அல்லாமலும் அவனை வாரினுல் அடித்துக் கொ
லைசெய்வார்கள். மேலும் மூன்ரும் நாளிலே உயி

ரோடெழுந்திருப்பானென்றார்.

அவர்கள் இவைகளிலொன்றையும் உணரவில்லை 34
அவைகளின் பொருள் அவர்களுக்கு மறைவாயிரு
ந்தது. அவர் சொன்னவைகளை அறியாமலிருந்தா
ர்கள்.

அவர் எரிகோவூருக்குச் சமீபமானபொழுது வ 35
ழியருகே உளுக்கார்ந்து பிச்சை கேட்டுக்கொண்டி
ருக்கிற ஒரு குருடன்,

சனங்கள் நடக்கிறதைக் கேள்விப்பட்டு இதென் 36
னவென்று விசாரித்தான்.

நாசரேத்தூராகிய இயேசு நடந்துபோகிறு 37
ரென்று அவனுக்கு அறிவித்தார்கள்.

அப்பொழுது அவன் இயேசுவே, தாவீதின் கு 38
மாரனே, எனக்கு இரங்குமென்று அதிகமாய்க் கூ
ப்பிட்டான்.

முன்னடப்பார் அவன் பேசாமலிருக்கும்படிக் 39
கு அவனை அதட்டினார்கள். அவன் தாவீதின் கு
மாரனே; எனக்கு இரங்குமென்று அதிகமாய்க் கூ
ப்பிட்டான்.

அப்பொழுது இயேசுவானவர் நின்று அவனைத் 40
தம்மிடத்திற் கொண்டுவரும்படி கட்டளையிட்டார்.
அவன் கிட்ட வந்தபொழுது அவர் அவனை நோக்கி,

நான் உனக்கு என்ன செய்யவேண்டுமென்றிரு 41
க்கிறாய் என்றார். அதற்கு அவன் ஆண்டவரே, நா
ன் பார்வை அடையும்படி செய்யவேண்டும் என்
றான்.

இயேசுவானவர் அவனை நோக்கி நீ பார்வை அ 42
டைவாயாக. உன் விசுவாசம் உன்னை இரட்சித்த
தென்றார்.

உடனே அவன் பார்வையடைந்து பராபரனைப் 43
புகழ்ந்து அவருக்குப் பின்சென்றான். அதைக்கண்

ட சனங்கள் எல்லாரும் பராபரனுக்குத் துதி செ
லுத்தினார்கள்.

---

௧௯. அதிகாரம்.

1 பின்பு அவர் எரிகோவூரிற் பிரவேசித்து அப்பு
றம் நடந்துபோனார்.
2 அப்பொழுது ஆயக்காரருக்குத் தலைவனுமாய்
ஐசுவரியவானுமாயிருந்த சக்கேயு என்னப்பட்ட
மனிதன் இயேசுவானவரை அறியும்படிக்கு அவ
ரைப்பார்க்க வகைதேடினான்.
3 அவன் குட்டையனானபடியாற் சனக்கூட்டத்தி
லே அவரைக் காணக்கூடாமலிருந்தது.
4 அப்பொழுது அவன் அவரைப் பார்க்கும்படிக்
கு முன்னாக ஓடி அவர் செல்லுகிற வழியிலே நிற்கி
ன்ற காட்டத்திமரத்தின்மேல் ஏறினான்.
5 இயேசுவானவர் அந்த இடத்திற் சென்றபொழு
து அண்ணாந்துபார்த்து அவனைக் கண்டு சக்கேயு
வே, இன்றைக்கு நான் உன் வீட்டிலே தங்கவேண்
டும். ஆகையால் நீ சீக்கிரமாயிறங்கி வாவென்றார்.
6 அந்தப்படி அவன் சீக்கிரமாயிறங்கிச் சந்தோஷ
த்தோடே அவருக்கு உபசாரஞ் செய்தான்.
7 அதைக் கண்ட அனைவருஞ் சொன்னது, இவர்
பாவியான மனிதனிடத்திலே தங்கும்படிக்குப்
போகிறாரென்று மொறுமொறுத்தார்கள்.
8 சக்கேயு என்பவன் நின்று கர்த்தரை நோக்கி, ஆ
ண்டவரே, என் ஆஸ்திகளிற் பாதியை ஏழைகளுக்
குக் கொடுக்கிறேன். அல்லாமலும் நான் ஒருவனி
டத்தில் ஏதையாகிலும் அநியாயமாய் எடுத்திருந்
தேனானால் நாலு மடங்காய்ப் பதிற்செலுத்துகிறே
னென்றான்.
9 அப்பொழுது இயேசுவானவர் அவனைக் குறித்

னுக் சொன்னது இழந்து போனதைத் தேடி இர
ட்சிக்கும்படிக்கு மனிதனுடைய குமாரன் வந்திரு
க்கிறபடியினாலே இன்றைக்கு இந்தக் குடும்பத்திற்
கு இரட்சிப்பு உண்டாயிற்று.
இவனும் ஆபிரகாமினுடைய சந்ததியானல்லவா 10
வென்றார்.
அன்றியும் அவர்கள் இவைகளைக் கேட்டுக்கொ 11
ண்டிருக்கையில் அவர் எருசலேமுக்குச் சமீபமா
னபடியினாலும் பராபரனுடைய ஆளுகை சீக்கிர
மாகக் காணப்படுமென்று அவர்கள் நினைத்தபடி
யினாலும் அவர் சொன்ன உவமையாவது,
உயர் குலத்தானாகிய ஒருவன் ஒரு இராச்சியத் 12
தைப்பெற்றுக்கொண்டு பின்பு திரும்பிவரும்படிக்
குத் தூரதேசத்துக்குப் போக மனதாய்,
தன்னுடைய பத்து ஊழியகாரரை அழைத்து 13
அவர்களுக்குப் பத்திறாத்தல் திரவியங்கொடுத்து
நான் வருகிற வரைக்கும் இதினாலே தொழில் செ
ய்யுங்களென்று சொல்விப் போனான்.
அவனுடைய பட்டினத்தார் அவனைப் பகைத்து 14
அவன் எங்களை ஆளுகைசெய்ய எங்களுக்கு மனதி
ல்லையென்று சொல்லும்படிக்கு அவனுக்குப் பின்
னாகத் தானாதிபதிகளை அனுப்பினார்கள்.
அப்படியிருந்தும் அவன் இராச்சியத்தைப்பெ 15
ற்றுக்கொண்டு திரும்பி வந்து தான் திரவியங்கொ
டுக்கப்பெற்றிருந்த அந்த ஊழியக்காரர் தொழில்
செய்ததினாலே ஆதாயமாக்கிக்கொண்டது இவ்வள
வென்று அறியும்படிக்கு அவர்களைத் தன்னிடத்து
க்கு அழைத்துவரச் சொன்னான்.
அந்தப்படியே முந்தினவன் சேர்ந்து ஆண்டவ 16
னே, உம்முடைய றாத்தல் பத்துறாத்தலை ஆதாயம்
பண்ணிற்று என்றான்.

17 அவனுடனே எசமான் சொன்னது, நல்லது உ
த்தம ஊழியக்காரனே, நீ கொஞ்சத்திலே உண்
மையாயிருந்தபடியினாலே பத்துப் பட்டினங்களு
க்கு அதிகாரியாயிருவென்றான்.
18 பின்பு இரண்டாம் ஊழியக்காரன் சேர்ந்து ஆண்
டவனே, உம்முடைய ருத்தல் ஐந்துருத்தலை ஆதா
யம்பண்ணிற்று என்றான்.
19 அவனுடனேயும் அவன் சொன்னது, நீயும் ஐந்
துபட்டினங்களுக்கு அதிகாரியாயிருவென்றான்.
20 பின்பு வேறொருவன் சேர்ந்து ஆண்டவனே, நீர்
வையாததை எடுக்கிறவருமாய் விதையாததை அறு
க்கிறவருமாயிருக்கிற கடினமுள்ள மனிதனாயிருக்
கிறதை நான் அறிந்தும் உமக்குப் பயப்பட்டபடி
யினாலே,
21 உம்முடைய ருத்தலை ஒரு சேலையிலே வைத்துக்
கொண்டேன். இதோ அது இருக்கின்றதென்றான்.
22 அவனுடனே அவன் சொன்னது, பொல்லாத
ஊழியக்காரனே, உன் வாக்கின்படி உனக்கு நியா
யத்தீர்ப்புக்கொடுக்கிறேன். நான் வையாததை எடு
க்கிறவனுமாய் விதையாததை அறுக்கிறவனுமாயி
ருக்கிற கடினமுள்ள மனிதனென்றறிந்தாயே,
23 ஆகையால் நான் திரும்பி வருகிறபொழுது என்
திரவியத்தை வட்டியோடே பெற்றுக்கொள்ளும்
படிக்கு நீ அதை (வட்டிக்காக) காசுக்கடையிலே
ஏன் கொடுக்கவில்லையென்று சொல்லி,
24 சமீபமாய் நிற்கிறவர்களை நோக்கி, நீங்கள் அந்
த ருத்தலை இவனிலிருந்து எடுத்துப் பத்துருத்த
லுள்ளவனுக்குக் கொடுங்களென்று கட்டளையிட்ட
பொழுது,
25 அவர்கள் ஆண்டவனே, அவனுக்குப் பத்துருத்த
லுண்டேயென்க,

அவன் பின்னுஞ் சொன்னது, நான் உங்களுக்கு 26
ச்சொல்லுகிறதாவது, உள்ளவனுக்குக்கொடுக்கப்
படும். இல்லாதவனுக்கு உண்டாயிருக்கிறதும் அ
வனிலிருந்து எடுக்கப்படும்.
அன்றியும் நான் தங்களுக்கு இராசாவாயிருக்க 27
மனதில்லாமலெனக்குச் சத்துருக்களான அவர்க
ளை இங்கே கொண்டுவந்து எனக்கு முன்பாக வெ
ட்டிப்போடுங்களென்று சொன்னானென்றார்.
இவைகளை அவர் சொன்ன பின்பு அவர் எருச 28
லேமுக்குப் போகும்படி முன்னே நடந்தார்.
அப்படி அவர் ஒலிவமலையென்னப்பட்ட மலை 29
யின் அருகேயிருக்கிற பெதுபாகே ஊருக்குப்பெ
த்தானியா ஊருக்குஞ் சமீபமானபொழுது அவர்
தமது சீஷரில் இருவரை நோக்கி,
அதோ உங்களுக்கு எதிராயிருக்கிற கிராமத்துக் 30
குப் போங்கள். அதிற் பிரவேசிக்கும்பொழுது ம
னிதரில் ஒருவனாகிலும் ஒருக்காலும் ஏறாத கழுதை
க்குட்டியைக் கட்டியிருக்கக் காண்பீர்கள். அதை
அவிழ்த்துக்கொண்டுவாருங்கள்.
இதை என் அவிழ்க்கிறீர்களென்று ஒருவன் உங்க 31
ளிடத்திற் கேட்டால் ஆண்டவருக்கு இது வேண்டு
மென்று அவனுக்குச் சொல்லுங்கள் என்றார்.
அந்தப்படி அனுப்பப்பட்டவர்கள் போய்த் தங் 32
களுக்கு அவர் சொன்னபிரகாரமாகக் கண்டார்கள்.
கழுதைக்குட்டியை அவர்கள் அவிழ்க்கிறபொழு 33
து அதின் எசமான்கள் அவர்களை நோக்கிக் குட்டி
யையென் அவிழ்க்கிறீர்களென்றார்கள்.
அதற்கு அவர்கள் ஆண்டவருக்கு இது வேண்டு 34
மென்று சொல்லி,
அதை இயேசுவினிடத்திற்குக் கொண்டுவந்து த 35
ங்கள் வஸ்திரங்களைக் குட்டியின்மேற்போட்டு இ

பேசவை அதின்மேலேற்றினார்கள்.
36 அப்படி அவர் போகையில் அவர்கள் தங்கள் வ
ஸ்திரங்களை வழியிலே விரித்தார்கள்.
37 அல்லாமலும் அவர் ஒலிவமலையின் அடிவாரமா
யிச்சேர்ந்து வருகிறபொழுது சீஷரின் கூட்டத்தா
ரெல்லாருந் தாங்கள் கண்ட சகல அற்புதங்களையுங்
குறித்துச் சந்தோஷப்பட்டு மிகுந்த சத்தத்துட
னே பராபரனைத் துதிக்கத் தொடங்கிப் பராபர
னுடைய நாமத்தினாலே வருகிற இராசா தோத்திரி
க்கப்பட்டவர்.
38 பரமண்டலத்திற் சமாதான சவுக்கியமும் உன்ன
தங்களிற் புகழ்தலும் உண்டாவதாக என்றார்கள்.
39 அப்பொழுது கூட்டத்திலிருந்த பரிசேயரிற் சி
லர் அவரை நோக்கிப் போதகரே, நீர் உம்முடைய
சீஷரை அதட்டவேண்டும் என்றார்கள்.
40 அவர்களுக்கு மறுமொழியாக அவர் சொன்ன
து, இவர்கள் பேசாமலிருந்தாற் கல்லுக்களே கூப்
பிடுமென்று உங்களுக்குச்சொல்லுகிறேனென்றார்.
41 அன்றியும் அவர் பட்டினத்துக்குச் சமீபமான
பொழுது அவர் அதைப் பார்த்து அதைக் குறித்
துக் கண்ணீர்விட்டு நீ உனக்குக் கிடைத்த இந்த
நாளிலே உன் சமாதானத்துக்கு எற்றவைகளைச் சி
ந்தித்துக்கொண்டால் நலமாயிருக்கும்.
42 இப்பொழுது அவைகள் உன் கண்களுக்கு ம
றைவாயிருக்கின்றன.
43 உன்னைச் சந்திக்குங் காலத்தை நீ சிந்தித்துக்கொ
ள்ளாமலிருக்கிறபடியினாலே உன் சத்துருக்கள் உ
ன்னைச் சூழ மதிள்போட்டு உன்னை வளைந்துகொ
ண்டு,
44 எங்கும் உன்னை இறுகப்பிடித்து உன்னையும் உ
ன்னிலுள்ளவர்களையுந் தரையாக்கி உன்னிடத்திற்

ஒரு கல் மற்றொரு கல்லின் மேல் இராதபடிக்குச்
செய்யும் நாட்கள் உனக்கு வருமென்றார்.
பின்பு அவர் தேவாலயத்திற் பிரவேசித்து, 45
அதிலே விற்கிறவர்களையுங் கொள்ளுகிறவர்களை 46
யும் நோக்கி, தம்முடைய ஆலயம் செபம்பண்ணு
வதற்கான ஆலயமென்று எழுதியிருக்கின்றதே. நீ
ங்கள் இதைக் கள்ளர் குகை யாக்கினீர்களென்று
சொல்லி அவர்களைப் புறம்பே துரத்தினார்.
அல்லாமலும் நாடோறும் அவர் தேவாலயத்தி 47
லே உபதேசம் பண்ணிக்கொண்டிருந்தார். அப்
பொழுது பிரதான ஆசாரியரும் வேதபாரகருஞ்
சனத்தின் மூப்பரும் அவரைக் கொலைசெய்ய வ
கைதேடி,
சனங்களெல்லாரும் மிகுந்த சிந்தனையோடே அ 48
வருக்குச் செவிகொடுத்தபடியினாலே வகையைக்
காணாமற்போனார்கள்.

---

உ௰. அதிகாரம்.

அந்நாட்களில் ஒரு நாளிலே அவர் தேவாலயத் 1
திற் சனங்களுக்கு உபதேசம்பண்ணிச் சுவிசேஷத்
தைப் பிரசங்கிக்கிறபொழுது பிரதான ஆசாரியரு
ம் வேதபாரகரும் மூப்பரும் அவருக்கு விரோத
மாய் வந்து நின்று,
அவரை நோக்கி நீர் எந்த அதிகாரத்தினால் இவை 2
களைச் செய்கிறீர்? இப்படிப்பட்ட அதிகாரத்தை
உமக்குக் கொடுத்தவர் இன்னாரென்று எங்களுக்கு
ச் சொல்லுமென்றார்கள்.
அதற்கு மாறுத்தரமாக அவர் சொன்னது, நா 3
னும் உங்களிடத்தில் ஒரே வினாவைக் கேட்பேன்.
என்னவென்றால், யோவான் கொடுத்த ஸ்நானந் 4
தேவனால் உண்டாயிற்றோ? மனிதரால் உண்டாயி

த்தேரே? அதை எனக்குச் சொல்லுங்களென்றார்.
5 அப்பொழுது அவர்கள் தங்களுக்குள்ளே யோ
சனைபண்ணினதாவது,
6 தேவனால் உண்டாயிற்றென்று நாம் சொன்னால்
நீங்கள் அவனை ஏன் விசுவாசிக்கவில்லை என்பார்.
அது மனிதரால் உண்டாயிற்றென்று நாம் சொன்
னால் எல்லாச் சனங்களும் யோவானைத் தீர்க்கதரி
சியென்று எண்ணிக்கொள்ளுகிறபடியினாலே நம
துமேற் கல்லெறிவார்களென்று யோசனைபண்ணி,
7 பின்பு அது வந்த விதம் எங்களுக்குத் தெரியா
தென்றார்கள்.
8 அதற்கு இயேசுவானவர் சொன்னது அப்படி
யானால் நான் இன்ன அதிகாரத்தினாலே இவைகளை
ச் செய்கிறேனென்று நானும் உங்களுக்குச் சொ
ல்லமாட்டேன் என்றார்.
9 பின்பு அவர் சனங்களுடனே சொன்ன உவமை
யாவது, ஒரு மனிதன் திராட்சத்தோட்டத்தை உ
ண்டாக்கி அதைத் தோட்டக்காரர் வசமாய் விட்டு
அநேககாலமாய்ப் புறத்தேசம்போயிருந்தான்.
10 தகுதியான காலத்திலே அந்தத் தோட்டக்கார
ர் திராட்சத் தோட்டத்தின் கனிகளில் ஒரு பங்கை
த் தனக்குக் கொடுத்து அனுப்பும்படிக்கு அவன்
ஒரு ஊழியக்காரனை அவர்களிடத்துக்கு அனுப்பி
னான். அந்தத் தோட்டக்காரர் அவனை அடித்து
வெறுமையாய் அனுப்பிவிட்டார்கள்.
11 பின்பு அவன் வேறொரு ஊழியக்காரனை அனுப்
பினான். அவனையும் அவர்கள் அடித்து நிந்தைப்ப
டுத்தி வெறுமையாய் அனுப்பிவிட்டார்கள்.
12 அதன் பின்பு அவன் மூன்றும் ஊழியக்காரனை
அனுப்பினான். அவனையும் அவர்கள் காயப்படுத்
தித் துரத்தினார்கள்.

அப்பொழுது திராட்சத்தோட்டத்தின் எசமான் 13
என்னினது, நான் என்ன செய்யலாம், எனக்குப்
பிரியமான குமாரனை அனுப்பினால் அவர்கள் கண்
டு கனஞ்செய்வார்களென்றெண்ணி அவனை அனுப்
பினான்.

தோட்டக்காரர் அவனைக் கண்டபொழுது இவ 14
ன் சுதந்தரவாளி சுதந்தரம் நம்முடையதாகும்படிக்
கு இவனைக் கொலைசெய்ய வேண்டுமென்று தங்க
ளுக்குள்ளே யோசனைபண்ணி,

வாருங்களென்று சொல்லி அவனைத் திராட்சத் 15
தோட்டத்துக்கு வெளியே தள்ளிக் கொலைசெய்
தார்கள். ஆதலால் திராட்சத் தோட்டத்தின் எச
மான் அவர்களை என்ன செய்வான்?

அவன்வந்து அந்தத் தோட்டக்காரரை அழித்துத் 16
திராட்சத் தோட்டத்தை வேறு மனிதருக்குக் கொ
டுப்பானல்லவா என்றார். அதை அவர்கள் கேட்டு
அப்படி ஆகாதிருப்பதாக என்றார்கள்.

அப்பொழுது அவர் அவர்களைப் பார்த்து வீடு 17
கட்டுகிறவர்கள் ஆகாதென்று தள்ளின கல்லே கோ
டிக்குத் தலையான கல்லாயிற்றென்று எழுதியிருக்கி
ற வேதவாக்கியத்தின் கருத்தென்ன?

அந்தக் கல்லின் மேல்விழுகிறவன் எவனோ அவ 18
ன் நொறுக்கப்படுவான். அன்றியும் அது விழப்ப
டுபவன் எவனோ அவனை நசுக்கிப்போடும் என்றார்.

அப்பொழுது தங்களைக் குறித்து அந்த உவமை 19
யைச் சொன்னார் என்று பிரதான ஆசாரியரும் வே
தபாரகரும் அறிந்து அந்நேரத்திலே அவர்மேல்
கைகளைப் போட விரும்பினார்கள். சனங்களுக்குப்
பயப்பட்டபடியால் (நிறுத்தினார்கள்.)

பின்பு அவர்கள் அவரையே நோக்கிக்கொண்டு 20
ஆளுகைக்கும் அதிகாரத்துக்கும் முன்பாக

அவரை ஒப்புக்கொடுக்கிறதற்கு ஏதுவாக அவரு
டைய வசனத்திற் குற்றங் கண்டுபிடிக்கும்படிக்குத்
தங்களை நீதிமான்கள்போலக் காண்பிக்கிற வேவுகா
ரரை அவரிடத்தில் அனுப்பினார்கள்.
21 அவர்கள் வந்து அவரை நோக்கிப் போதகரே,
நீர் செம்மையாய்ப் பேசி உபதேசிக்கிறவர் என்று
ம் பட்சபாதமில்லாமற் சத்தியமாய்ப் பராபரனு
டைய மார்க்கத்தைப் போதிக்கிறவர் என்றும் அறி
ந்திருக்கிறோம்.
22 நாம் இராயனுக்கு வரிகொடுக்கலாமோ கொடா
மல் இருக்கலாமோ என்று அவரிடத்திற் கேட்டார்
கள்.
23 அவர்களுடைய தந்திரத்தை அவர் அறிந்து அவர்
களை நோக்கி நீங்கள் என்னை என் சோதிக்கிறீர்கள்?
24 பணத்தை எனக்குக் காண்பியுங்கள். அதில் இ
ருக்கிற சொரூபமும் மேலெழுத்தும் ஆருடைய
வைகளென்றார். அவை இராயனுடையவைகள் எ
ன்று மாறுத்தரஞ் சொன்னார்கள்.
25 அவர் சொன்னது, அப்படியானால் நீங்கள் இரா
யனுடையதை இராயனுக்கும் பராபரனுடையதை
ப் பராபரனுக்குஞ் செலுத்துங்களென்றார்.
26 அவர்கள் அவரைச் சனங்களுக்கு முன்பாக ஒரு
வசனத்தில் அகப்படுத்தக் கூடாமல் அவருடைய
மாறுத்தரத்தைக் குறித்து ஆச்சரியப்பட்டு மவுன
மாயிருந்தார்கள்.
27 பின்பு மறுமையாகிய உயிரோடெழும்புதல் இல்
லை என்று சொல்லுகிற சதுசேயரிற் சிலர் அவரிட
த்தில் வந்து கேட்டதாவது,
28 போதகரே, பெண்ணை விவாகம்பண்ணின ஒரு
வன் பிள்ளை இல்லாமல் இறந்து போனால் அவனு
டைய மனைவியை அவனுடைய சகோதரன் (சேர்

ந்து) தன் சகோதரனுக்குச் சந்ததி உண்டாக்க வே
ண்டும் என்று மோசே நமக்குக் கட்டளையாக எ
ழுதினாரே,

அந்தப்படி (ஓரிடத்திலே) சகோதரர் எழுபேரி 29
ருந்தார்கள். அவர்களில் மூத்தவன் ஒரு பெண்
ணை விவாகம்பண்ணிப் பிள்ளை இல்லாமல் இறந்து
போனான்.

அப்பொழுது இரண்டாஞ் சகோதரன் அந்தப் 30
பெண்ணை விவாகம்பண்ணி அவனும்பிள்ளை இல்லா
மல் இறந்துபோனான்.

மூன்றாஞ் சகோதரன் முதல் எழுபேர் வரைக் 31
கும் அந்தப்படியே அவளை விவாகம்பண்ணிப் பிள்
ளைகளைப் பெறாமல் இறந்துபோனார்கள்.

அவர்களெல்லாருக்கும் பின்பு அந்தப் பெண்ணு 32
ம் இறந்துபோனாள்.

இவ்விதமாய் எழு பேரும் அவளை விவாகம்பண் 33
ணினவர்களாய் இருக்க (மரித்தோர்) உயிரோடெ
ழுந்திருக்குங் காலத்தில் அவர்களில் எவனுக்கு அ
வள் மனைவியாய் இருப்பாளென்றார்கள்.

அவர்களுக்கு மாறுத்தரமாக இயேசுவானவர் 34
சொன்னது, இம்மையில் இருக்கிறவர்கள் பெண்
கொண்டுங் கொடுத்தும் வருகிறார்கள்.

மறுமையிலுள்ள பாக்கியத்தையும் மரித்தோரி 35
லிருந்து எழுந்திருக்குதலையும் அடைவதற்குப் பா
த்திரராய் எண்ணப்படுபவர்கள் பெண்கொள்வது
ங் கொடுப்பதுமில்லை.

என்னத்தினாலெனில் அவர்கள் உயிரோடெழுந் 36
திருக்கத் தக்கவர்களாய் இருக்கத் தேவதூதருக்கு
ஒப்பானவர்களுமாய்ப் பராபரனுடைய பிள்ளைக
ளுமாய் இருப்பதால் அவர்கள் இனி மரிக்கக்கூடா
திருப்பார்களே.

37 அன்றியும் மரித்தோர் எழுந்திருப்பார்கள் என்
பதை மோசேயும் முட்செடியைக் குறித்து எழுதி
ன சரித்திரத்திலே காண்பித்தார். எப்படியெனில்
அவர் பராபரனை ஆபிரகாமுடைய தேவனென்றும்
ஈசாக்கினுடைய தேவன் என்றும் யாக்கோபினு
டைய தேவனென்றுஞ் சொல்லி இருக்கிறார்.
38 பராபரன் மரித்தோருடைய தேவனாய் இராமற்
சீவனுள்ளோருடைய தேவனாயிருக்கிறார். அவர்க
ளெல்லாரும் அவருக்குப் பிழைத்திருக்கிறார்களே
என்றார்.
39 வேதபாரகரிற் சிலர் அதைக்கேட்டுப் போதக
ரே, நன்றாய்ச் சொன்னீர் என்றார்கள்.
40 பின்பு அவர்கள் அவரிடத்தில் வேறொன்றைக்கே
ட்கத் துணியவில்லை.
41 அப்பொழுது அவர் அவர்களை நோக்கிக் கிறிஸ்
துவானவர் தாவீதின் குமாரனாய் இருப்பார் என்று
என்னத்தினாலே சொல்லுகிறார்கள்?
42 அல்லாமலும் பராபரன் என் கர்த்தாவை நோக்கி
நான் உம்முடைய சத்துருக்களை உமது பாதபடி
யாக்கிப்போடுமளவும்,
43 நீர் எனது வலதுபாரிசத்தில் உளுக்காரும் என்
றொன்று தாவீதுதானே சங்கீதப் புத்தகத்திற்
சொல்லி இருக்கிறாரே.
44 தாவீது அவரைக் கர்த்தரென்று சொல்லியிருக்க
எப்படி அவர் அவனுடைய குமாரனாவாரென்றார்.
45 அப்பொழுது சனங்கள் எல்லாருங் கேட்க அவ
ர் தம்முடைய சீஷருடனே சொன்னதாவது,
46 நீளமான வஸ்திரங்களைத் தரித்து நடக்கமனதாய்
இருந்து சந்தைகளில் வாழ்த்துதலையும் செப ஆல
யங்களில் முதல் ஆசனங்களையும் விருந்துகளில் மு
தலிடங்களையும் விரும்பிக்,

கைம்பெண்களுடைய பொருள்களைப் பட்சித்து 47
வஞ்சகமாய் விஸ்தாரமான செபம்பண்ணி வருகிற
வேதபாரகருக்கு நீங்கள் இடங்கொடாமல் எச்சரிக்
கையாய் இருங்கள். அவர்களே அதிக ஆக்கினையை
அடைவார்களென்றார்.

---

## ௨௧. அதிகாரம்.

பின்பு அவர் கண்ணையுயர்த்திப் பார்க்கிற பொ 1
ழுது ஐசுவரியவான்கள் தங்கள் காணிக்கைகளைத் த
ருமப் பெட்டியிற் போடுகிறதைக் கண்டார்.
அல்லாமலும் இரண்டு காசை அதிலே போட்ட 2
ஒரு ஏழைக் கைம்பெண்ணையும் அவர் கண்டு,
இந்த ஏழைக் கைம்பெண் மற்றெல்லாரிலும் அ 3
திகம் போட்டாள் என்று மெய்யாய் உங்களுக்குச்
சொல்லுகிறேன்.
எப்படியெனில் அவர்கள் எல்லாருந் தங்கள் பரி 4
பூரணத்தில் எடுத்துத் தேவ காணிக்கைப் பெட்டி
யிற் போட்டார்கள். இவள் தன் குறைவிலே தன்
சீவனத்துக்குண்டான யாவையும் போட்டாளென்
றார்.
பின்பு சிலர் தேவாலயத்தைக் குறித்து அது அ 5
ழகான கல்லுக்களாலும் காணிக்கைகளாலும் அலங்
கரிக்கப்பட்டிருக்கின்றதென்று சொன்னபொழுது
அவர் சொன்னது.
நீங்கள் பார்க்கிற இவைகளில் ஒரு கல் மற்றொரு 6
கல்லின்மேல் இராதபடிக்கு எல்லாம் இடிக்கப்படு
ம் நாட்கள் வரும் என்றார்.
அப்பொழுது அவரை அவர்கள் நோக்கிப் போ 7
தகரே, இவைகள் எப்பொழுது நடக்கும்? இவைக
ள் சம்பவிக்கும் காலத்துக்கு அடையாளம் என்ன
வென்று கேட்டார்கள்.

8 அதற்கு அவர் சொன்னது, அநேகர் என் நாமத்
தை எடுத்துத் தங்களை அவரே என்றுங் காலஞ் ச
மீபமாய் வந்ததென்றுஞ் சொல்லுவார்கள். நீங்கள்
வஞ்சிக்கப்படாதபடிக்கு எச்சரிக்கையுள்ளவர்களா
ய் அவர்களுக்குப் பின்செல்லாமலிருங்கள்.
9 அல்லாமலும் யுத்தங்களையுங் கலகங்களையுங் குறி
த்துக் கேள்விப்படும்பொழுது திகிலடையாதிருங்
கள். அப்படிப்பட்டவைகள் முன்னடக்கவேண்டு
மே. ஆனாலும் முடிவு உடனேவராதென்று சொல்
லிப் பின்பு திருவுளம்பற்றினதாவது,
10 ஒரு சனக்கூட்டம் மற்றொரு சனக்கூட்டத்துக்
கும் ஒரு இராச்சியத்தார் மற்றொரு இராச்சியத்
தாருக்கும் விரோதமாக எழும்புவார்கள்.
11 அல்லாமலும் பல இடங்களிலே பூமி மிகவும் அ
திர்தலும் பஞ்சங்களும் பெருவாரிக் காய்ச்சல்களு
ம் உண்டாயிருக்கும். வானத்தில் இருந்து பயமு
ண்டாக்குகிற காரியங்களும் பெரிய அடையாளங்க
ளும் உண்டாகும்.
12 அவைகள் எல்லாவற்றிற்கு முன்னே என்னுடை
ய நாமத்தின் நிமித்தம் அவர்கள் உங்கள் மேலே தங்
கள் கைகளைப்போட்டு உங்களைத் துன்பப்படுத்திச்
செப ஆலயங்களுக்குஞ் சிறைச்சாலைகளுக்கும் ஒப்பு
க்கொடுத்து இராசாக்களுக்குந் துரைகளுக்கும்
முன்பாகக் கொண்டுபோவார்கள்.
13 ஆனாலும் அது நீங்கள் சாட்சிகொடுக்கும்படிக்
கு ஏதுவாயிருக்கும்.
14 ஆகையால் எப்படி மாறுத்தரவு சொல்லலாமெ
ன்று நீங்கள் கவலைப்படாதிருக்கும்படி உங்கள் ம
னதைத் திடப்படுத்துங்கள்.
15 நானே உங்களுக்கு (தகுதியான) பேச்சையும்
ஞானத்தையுங் கொடுப்பேன். உங்கள் எதிராளிகள்

யாவரும் அதற்கு விரோதமாய்ப் பேசவும் எதிர்
நிற்கவுமாட்டார்கள்.
அன்றியும் பெற்றோராலுஞ்சகோதரராலும் இன 16
த்தாராலுஞ் சிநேகிதராலுங்காட்டிக்கொடுக்கப்படு
வீர்கள் உங்களிற் சிலரைக் கொலைசெய்விப்பார்கள்.
என் நாமத்தினிமித்தம் நீங்கள் சகலவிதமான மனித 17
ராலும் பகைக்கப்படுவீர்கள்.
ஆனாலும் உங்கள் தலையின் மயிர் ஒன்றாகிலும் அ 18
ழியாது.
பொறுமையினாலே உங்கள் ஆத்துமாக்களைக் கா 19
த்துக்கொள்ளக்கடவீர்கள்.
அன்றியுஞ் சேனைகளால் எருசலேம் வளைக்கப் 20
பட்டிருக்கிறதை நீங்கள் காணும்பொழுது அதின்
அழிவு சமீபமாயிற்றென்றறியுங்கள்.
அப்பொழுது யூதேயா நாட்டில் இருப்பவர்க 21
ள் மலைகளுக்கு ஓடிப் போகவும் எருசலேமுக்குள்
ளே இருப்பவர்கள் வெளியே புறப்படவும் நாட்டு
ப்புறங்களில் இருப்பவர்கள் அதற்குட் பிரவேசியா
மல் இருக்கவுங் கடவர்கள்.
எழுதியிருக்கிற யாவும் நிறைவேறும்படியாய் அந் 22
நாட்களே பழிவாங்குதற்கானவைகளாய் இருக்கும்.
அந்நாட்களில் ஐயோ! கருப்பவதிகளுக்கும் மு 23
லைகொடுக்கிறவர்களுக்கும் வேதனையுண்டாயிருக்கு
ம். என்னத்தினாலெனில் இத்தேசத்தின்மேல் மிகு
ந்த இடுக்கணும் இந்தச் சனத்தின்மேற் கோபாக்கி
னையும் உண்டாகும்
பட்டயங்களினாலே அற்று விழுவார்கள். அல்லாமலு 24
ம் புறத்தேசத்தார் யாவருக்குள்ளேயுஞ் சிறைப்ப
ட்டுப் போவார்கள். அன்றியும் புறத்தேசத்தாரு
டைய காலங்கள் நிறைவேறுகிற வரைக்கும் எருச
லேம் புறத்தேசத்தாராலே மிதிக்கப்படும்.

25 சூரியனிலுஞ் சந்திரனிலும் நட்சத்திரங்களிலும்
அடையாளங்கள் தோன்றும், பூமியின்மேல் உள்ள
சனங்களுக்குள்ளே கலக்கமான உபத்திரவம் உண்
டாகும். சமூத்திரமும் அலைகளுங் கோஷ்டமாயிரு
க்கும்.

26 வானத்திற் பலமானவைகளும் அசையும். ஆத
லாற் பூலோகத்தின்மேல் வருகிற காரியங்களுக்குப்
பயந்து அவைகளை நோக்கிப் பார்க்கிறதினாலே ம
னிதர்கள் சோர்ந்து போவார்கள்.

27 அப்பொழுது மனிதனுடைய குமாரனை மிகுந்
த வல்லமையோடும் மகிமையோடும் மேகத்தில் வ
ரக் காண்பார்கள்.

28 அவைகள் சம்பவிக்கத் தொடங்கும் பொழுது
உங்கள் மீட்புச் சமீபமாய் வருவதால் நீங்கள் நிமி
ர்ந்து உங்கள் தலைகளை உயர்த்தக்கடவீர்கள் என்று
சொல்லி,

29 பின்பு உவமையாய்ச் சொன்னதாவது, அத்திம
ரத்தையும் மற்றச் சகல மரங்களையும் பாருங்கள்.

30 அவைகள் தளிர்க்கிறதை நீங்கள் காணும்பொழு
து வசந்தகாலஞ் சமீபமாயிற்றென்று அறிகிறீர்கள்.

31 அந்தப்படியே நான் சொன்னவைகள் சம்பவிக்
கிறதை நீங்கள் காணும்பொழுது பராபரனுடைய
ஆளுகை சமீபமாயிற்றென்று அறியக்கடவீர்கள்.

32 அவையெல்லாஞ் சம்பவிக்கிறவரைக்கும் இந்த
ச் சந்ததி ஒழிந்துபோகாதென்று மெய்யாய் உங்
களுக்குச் சொல்லுகிறேன்.

33 வானமும் பூமியும் ஒழிந்துபோம். என் வசனங்
கள் ஒழிந்து போகாது.

34 அன்றியும் பூமியில் எங்குங் குடியிருக்கிற அனைவ
ர்மேலும் அந்த நாள் ஒரு வலையைப்போல வருவ
தால்,

உங்கள் இருதயங்கள் பெருந்தீனியினாலும் வெ 35
றியினாலும் பிழைப்பின் கவலையினாலும் பாரம் அ
டையாதபடிக்கும் அந்த நாள் உங்களுக்குச் சடுதி
யாய் வாராதபடிக்கும் எச்சரிக்கையாயிருக்கக்கடவீ
ர்கள்.

ஆகையால் இனிச் சம்பவிப்பவைகள் யாவுக்கும் 36
நீங்கள் தப்பிக்கொண்டு மனிதனுடைய குமாரனு
க்கு முன்பாக நிற்கப் பாத்திரவான்கள் என்று எ
ண்ணப்படும்படிக்கு எக்காலமுஞ் செபம்பண்ணி
விழித்திருக்கக்கடவீர்களென்றுதிருவுளம்பற்றினார்.

அன்றியும் அவர் பகற்காலங்களிலே தேவாலயத் 37
தில் உபதேசித்துக்கொண்டு இராக்காலங்களிலே
வெளியே போய் ஒலிவ மலையென்னப்பட்ட மலை
யிலே தங்கிவந்தார்.

அவருடைய உபதேசத்தைக் கேட்கும்படிக்கு 38
ச் சனங்கள் எல்லாரும் அதிகாலையிலே தேவாலயத்
தில் அவரிடத்துக்கு வந்தார்கள்.

---

## உ௨. அதிகாரம்.

பஸ்கா என்னப்பட்ட புளியாத அப்பப்பண்டி 1
கை சமீபமாயிற்று.

அப்பொழுது பிரதான ஆசாரியரும் வேதபாரக 2
ருஞ் சனங்களுக்குப் பயப்பட்டபடியினாலே அவ
ரைக் கொலைசெய்யும்படிக்கு (இரகசியமாய்) வ
கைதேடினார்கள்.

அக்காலத்திலே பன்னிருவரில் ஒருவனாகிய இஸ் 3
காரியோத்தென்று பேர்கொண்ட யூதாவுக்குள்ளே
சாத்தான் புகுந்தான்.

ஆதலால் அந்த யூதாவென்பவன் பிரதான ஆசா 4
ரியரும் ஆலயத்தலைவருமானவர்களிடத்திற் போய்

அவர்களுக்கு அவரைக் காட்டிக்கொடுக்கும் வகை
யைக் குறித்து அவர்களுடனே போசனைபண்ணிக்
கொண்டான்.
5 அவர்கள் சந்தோஷிப்பட்டு அவனுக்குத் திரவி
யங் கொடுக்கத் தீர்மானித்தார்கள்.
6 அதற்கு அவன் பொருந்திச் சனக்கூட்டமில்லாத
பொழுது அவரை அவர்களுக்குக் காட்டிக் கொடு
க்கும்படிக்குத் தகுதியான காலத்தைத் தேடினான்.
7 பஸ்காவின் ஆட்டுக்குட்டியைப் பலியிட வேண்
டிய புளியாத அப்ப நாள் வந்தது.
8 அப்பொழுது அவர் பேதுருவையும் யோவானை
யும் அழைத்து நாம் பஸ்காவைப் பொசிக்கும்படி
க்கு நீங்கள் போய் நமக்காக அதை எத்தனம்பண்
ணுங்களென்றார்.
9 அதற்கு அவர்கள் நாங்கள் அதை எங்கே எத்தன
ம்பண்ண விரும்புகிறீர் என்றார்கள்.
10 அவர் சொன்னது, நீங்கள் பட்டினத்துக்குட் பி
ரவேசிக்கும் பொழுது ஒருவன் தண்ணீர்க்குடஞ்
சுமந்து கொண்டு உங்களுக்கு எதிர்ப்படுவான். நீ
ங்கள் அவனுக்குப் பின்சென்று அவன் போகும் வீ
ட்டிலே போய்,
11 அந்த வீட்டெசமானை நோக்கி நான் என் சீஷ
ரோடுங்கூடப் பஸ்காவைப் பொசிக்கத் தக்கதான
இடம் எங்கே என்று போதகர் உம்மிடத்திற் கேட்
கச் சொன்னார் என்று சொல்லுங்கள்.
12 அவன் கம்பள முதலானவைகள் விரித்திருக்கிற
விஸ்தாரமான மேல்வீட்டை உங்களுக்குக் காண்பி
ப்பான். அங்கே எத்தனம்பண்ணுங்கள் என்று அ
னுப்பினார்.
13 அவர்கள் போய் அவர்சொன்ன பிரகாரமாகக்கண்
டு பஸ்கா போசனத்தை எத்தனம் பண்ணினார்கள்.

தகுதியான நேரம் வந்தபொழுது அவரும் அவ 14
ருடனே பன்னிரண்டு அப்போஸ்தலரும் பந்தியி
ல் இருந்தார்கள்.
அப்பொழுது அவர் அவர்களை நோக்கி நான் பா 15
டுபடுகிறதற்கு முன்னே உங்களுடனே கூட இந்த
ப் பஸ்கா போசனம்பண்ண மிகவும் ஆசையாயிரு
ந்தேன்.
என்னத்தினாலென்றால் பராபரனுடைய இராச்சி 16
யத்திலே அது நிறைவேறும் அளவும் நான் பின்னு
ம் இதிற் பொசிப்பதில்லை என்று உங்களுக்குச் சொ
ல்லுகிறேனென்று சொல்லி,
பின்பு பாத்திரத்தை எடுத்துக் கொண்டு தோத் 17
திரஞ்செய்து,
பராபரனுடைய ஆளுகை வருமளவும் நான் ம 18
றுபடியுந் திராட்ச இரசத்திலே பானம் பண்ணுவ
தில்லை என்று உங்களுக்குச் சொல்லுகிறேன். ஆ
கையால் நீங்கள் இதை எடுத்து உங்களுக்குள்ளே
பங்கிட்டுக்கொள்ளுங்கள் என்றார்.
அல்லாமலும் அவர் அப்பத்தை எடுத்துக்கொ 19
ண்டு தோத்திரம் பண்ணி அதைப் பிட்டு அவர்களு
க்குக் கொடுத்து உங்களுக்காகக் கொடுக்கப்படுகி
ற என்னுடைய சரீரமாயிருக்கின்றது. என்னை நி
னைக்கிறதற்காக இப்படிச் செய்யுங்கள் என்று சொ
ல்லி இராப்போசனம் பண்ணின பின்பு,
அந்தப்படியே பாத்திரத்தையுங் கொடுத்து இந் 20
தப் பாத்திரம் உங்களுக்காகச்சிந்தப்படுகிற என் இ
ரத்தத்தினாலே புதிய உடம்படிக்கையாய் இருக்கி
ன்றதென்று சொல்லி,
பின்பு இதோ என்னைக் காட்டிக் கொடுக்கிறவனு 21
டைய கை என்னுடனே கூடப் பந்தியில் இருக்கின்
றது.

22 தீர்மானத்தின்படியே மனிதனுடைய குமாரன்
போகிறான். அதுமெய்தான். ஆனாலும் ஐயோ! அ
ந்த மனிதன் அவனைக் காட்டிக்கொடுக்கிறானோ அ
ந்த மனிதனுக்கு வேதனை வருமென்றார்.
23 அப்பொழுது அவர்கள் தம்மில் யாவன் அப்ப
டிச் செய்வானென்று தங்களுக்குள்ளே விசாரிக்கத்
தொடங்கினார்கள்.
24 அன்றியும் அவர்கள் தங்களில் எவன் பெரியவனா
ய் இருப்பானென்று தங்களுக்குள்ளே வாக்குவாத
ம்பண்ணிக் கொண்டிருந்த பொழுது,
25 அவர் அவர்களுக்குச் சொன்னதாவது புறத்
தேசத்தாருடைய இராசாக்கள் அவர்களைப் ப
லபந்தமாய் ஆண்டு கொள்ளுகிறார்கள். அல்லாம
லும் அவர்கள்மேல் அதிகாரஞ் செலுத்துகிறவர்க
ள் தருமத் துரைகள் என்று அழைக்கப்படுகிறார்கள்.
26 உங்களுக்குள்ளே அப்படி இருக்கக் கூடாது.
உங்களிற் பெரியவன் சிறியவனைப் போலவுந் தலை
வன் ஊழியக்காரனைப் போலவும் இருக்கக்கடவன்.
27 பந்தியில் இருக்கிறவன் ஊழியஞ் செய்கிறவன்
இவ்விருவரில் எவன் பெரியவன்? பந்தியில இருக்
கிறவனல்லவா? ஆனாலும் நான் உங்களுக்குள்ளே
ஊழியஞ் செய்கிறவனைப் போல இருக்கிறேன்.
28 மேலும் எனக்கு வந்த துன்பகாலங்களில் என்
னுடனே இருந்தவர்கள் நீங்களே.
29 ஆகையால் என் பிதா எனக்கு ஒரிராச்சியத்தை
ஏற்படுத்தி இருக்கிறபடியால்,
30 நீங்கள் என் இராச்சியத்தில் என் பந்தியிலே போ
சனபானம்பண்ணி இஸ்ரவேலின் பன்னிரண்டு கோ
த்திரத்தாருக்கு நியாயத்தீர்ப்புக் கொடுக்கிறவர்க
ளாய் ஆசனங்களின் மேல் உட்காரும்படிக்கு நா
ன் உங்களை ஏற்படுத்துகிறேனென்றார்.

கர்த்தர் பின்னுஞ் சொன்னதாவது, சீமோனே, 31
சீமோனே, கோதுமையைச் சுளகினாற் புடைக்கிற
து போல உங்களைப் புடைக்கும்படிக்குச் சாத்தா
ன் உத்தரவு கேட்டான்.

நானோ உன் விசுவாசம் ஒழிந்து போகாதபடிக் 32
கு உனக்காக வேண்டிக்கொண்டேன். அந்தப்ப
டி நீ இனிமேல் மனந்திரும்பின பின் உன் சகோத
ரரை ஸ்திரப்படுத்துவாயாகவென்றார்.

அதற்கு அவன் சொன்னது, ஆண்டவரே, உம் 33
முடனே கூட நான் காவலிலுஞ் சாவிலும் வர எத்
தனமாய் இருக்கிறேனென்றான்.

அவர் சொன்னது, பேதுருவே, இன்று சேவல் 34
கூவுமுன்னே நீ என்னை அறிந்திருக்கிறதை மூன்று
தரம் மறுதலிப்பாயென்று உனக்குச் சொல்லுகி
றேனென்றார்.

பின்னும் அவர் அவர்களுடனே சொன்னது, நா 35
ன் உங்களைப் பணப்பையுஞ் சாமான் பையும் பாத
இரட்சைகளும் இல்லாமல் அனுப்பினபொழுது ஏ
தாகிலும் உங்களுக்குக் குறைவாயிருந்ததாவென்றார்.
ஒன்றுங் குறைவாய் இருக்கவில்லையென்றார்கள்.

அவர் சொன்னது, இப்பொழுது பணப்பையை 36
யுஞ் சாமான்பையையும் உடையவன் அவைகளை எ
டுத்துக் கொள்ளக்கடவன், அல்லாமலுங் கத்தியில்
லாதவன் தன் வஸ்திரத்தை விற்று ஒன்றைக் கொள்
ளக் கடவன்.

என்னத்துக்கென்றால் என்னைக் குறித்து எழுதியி 37
ருக்கிறவைகள் முடிகிறபடியினாலே அக்கிரமக்கா
ரரோடே எண்ணப்பட்டாரென்றெழுதியிருக்கிறது.
என்னிடத்தில் நிறைவேறவேண்டுமென்று உங்களு
க்குச் சொல்லுகிறேனென்றார்.

அதற்கவர்கள் ஆண்டவரே, இதோ இரண்டு கத் 38

திகள் உண்டென்ஞர்கள். (அவைகளே) போது
மென்று அவர்களுடனே சொன்ஞர்.
39 பின்பு அவர் புறப்பட்டு வழக்கத்தின்படியே ஒ
லிவ மலைக்குப் போஞர். அவருடைய சீஷரும் அ
வருக்குப் பின்சென்ஞர்கள்.
40 அவ்விடத்திற் சேர்ந்தபொழுது அவர் அவர்களை
நோக்கி நீங்கள் குற்றஞ்செய்வதற்கான காரணத்தி
ற் பிரவேசியாதபடிக்குச் செபம்பண்ணுங்களென்
று சொல்லி,
41 கல்லெறி தூரத்தில் அவர்களைவிட்டுப் போய்,
42 முழங்காற் படியிட்டுப் பிதாவே, உமக்குச் சித்
தமானல் இந்தப் பாத்திரம் என்னை விட்டு நீங்கும்
படி செய்யும். இல்லாவிட்டால் என்னுடைய சித்
தத்தின்படியல்ல உம்முடைய சித்தத்தின்படியே
ஆவதாகவென்று செபம்பண்ணிஞர்.
43 அப்பொழுது வானத்திலிருந்து ஒரு தூதன்
தோன்றி அவரைப் பலப்படுத்திஞன்.
44 பின்னும் அவர் கொடிய வேதனைப் பட்டு அதி
க உக்கிரத்தோடே செபம்பண்ணிஞர். அப்பொ
ழுது அவருடைய வேர்வை இரத்தத் துளிகளைப்
போலாகித் தரையிலே விழுந்தது.
45 பின்பு அவர் செபம்பண்ணி முடித்தபொழுது
எழுந்திருந்து தம்முடைய சீஷரிடத்திற் போய் அ
வர்கள் துக்கத்திஞலே நித்திரை பண்ணக் கண்டு,
46 என்னத்திற்காகத் தூங்குகிறீர்கள்? நீங்கள் குற்
றஞ் செய்வதற்கான காரணத்திற் பிரவேசியாதபடி
க்கு எழுந்திருந்து செபம்பண்ணுங்களென்ஞர்.
47 அவர் அப்படிப் பேசுகையிற் சனங்கள் கூட்ட
மாய்ச் சேர்ந்தார்கள். அவர்களுக்கு முன்ஞகப்
பன்னிருவரில் ஒருவஞன யூதாவென்பவன் நடந்
துவோய் இயேசுவை முத்தஞ்செய்யும்படிக்கு அ

வரிடத்திற் சேர்ந்தான்.
அப்பொழுது இயேசுவானவர் அவனை நோக்கி 48
யூதாவே, நீ மனிதனுடைய குமாரனை முத்தத்தி
லேயா காட்டிக்கொடுக்கிறாயென்றார்.
அல்லாமலும் அவரைச் சுற்றியிருந்தவர்கள் சம் 49
பவிப்பதை அறிந்து அவரைநோக்கி ஆண்டவரே,
கத்தியினாலே நாங்கள் வெட்டலாமாவென்று சொ
ல்ல,
(உடனே) அவர்களில் ஒருவன் பிரதான ஆசாரிய 50
னுடைய வேலைக்காரனை வலதுகாதற வெட்டினான்.
அப்பொழுது இயேசுவானவர் இம்மட்டில் நிறு 51
த்துங்களென்று சொல்லி அவனுடைய காதைத்
தொட்டு அவனைக் குணமாக்கினார்
பின்பு இயேசுவானவர் தமக்கு விரோதமாய் வ 52
ந்த பிரதான ஆசாரியரையுந்தேவாலயத் தலைவரை
யும் மூப்பரையும் நோக்கி ஒரு கள்வனைப் பிடிக்
கப் புறப்படுகிறது போல நீங்கள் கத்திகளோடுந் த
டிகளோடும் புறப்பட்டுவந்தீர்கள்.
தினந்தோறும் நான் தேவாலயத்தில் உங்களுட 53
னே இருக்கையில் நீங்கள் என்மேற் கைகளைப்போ
டவில்லை. இதுவே உங்களுக்கேற்ற நேரமுமாய்
இருளின் வல்லமையுமாய் இருக்கின்றதென்றார்.
அப்பொழுது அவர்கள் அவரைப் பிடித்துப் பி 54
ரதான ஆசாரியனுடைய மாளிகைக்குக் கொண்டு
போனார்கள். பேதுருவுந் தூரமாக அவருக்குப்
பின்சென்றான்.
அல்லாமலும் அவர்கள் மாளிகையின் பிராகாரத்தி 55
ல் நடுவிலே நெருப்பை உண்டுபண்ணி அதைச் சு
ற்றி உளுக்கார்ந்தபொழுது பேதுருவும் அவர்க
ளுக்குள்ளே உளுக்கார்ந்தான்.
அப்பொழுது ஒரு வேலைக்காரி அவனை நெருப் 56

ழினிடத்தில் இருக்கக் கண்டு அவனை உற்றுப்பார்த்
து இவனும் அவனோடிருந்தானென்றாள்.
57 அதற்கு அவன் ஸ்திரியே, அவனை அறியேனென்
று அவரை மறுதலித்தான்.
58 சற்று நேரத்துக்குப் பின்பு வேறொருவன் அவ
னைக் கண்டு நீயும் அவர்களில் ஒருவனென்றான். அ
தற்குப் பேதுரு மனிதனே, நானல்லவென்றான்.
59 ஏறக்குறைய ஒரு மணி நேரத்துக்குப் பின்பு
வேறொருவன் அவனைப் பார்த்து மெய்யாய் இவ
னும் அவனோடிருந்தான். இவன் கலிலேயன் தா
னே என்று நிச்சயத்தோடே சொன்னான்.
60 அதற்குப் பேதுரு மனிதனே நீ பேசுகிறதை
அறியேனென்றான். உடனே அவன் பேசுகையிற்
சேவல் கூவிற்று.
61 அப்பொழுது கர்த்தர் திரும்பிப் பேதுருவை
நோக்கிப் பார்த்தார். உடனே பேதுரு சேவல் கூ
வுமுன்னே நீ என்னை மூன்றுதரம் மறுதலிப்பாயெ
ன்று தன்னோடே கர்த்தர் சொன்ன வசனத்தை நி
னைத்துக் கொண்டு,
62 வெளியே போய் மிகுந்த மனத் துக்கத்தோ
டே அழுதான்.
63 இயேசுவைப் பிடித்துக்கொண்ட மனிதர் அவ
ரை அசட்டைபண்ணி,
64 அடித்து அவருக்கு முக்காடிட்டு அவருடையமு
கத்தில் அறைந்து உன்னை அடித்தவன் யாவன்? அ
தைத் தீர்க்கதரிசனமாய்ச் சொல்லென்று சொல்லி,
65 மற்றும் அநேக விதமாய் அவரைத் தூஷணித்
தார்கள்.
66 உதயமான பொழுது சனத்தின் மூப்பரும் பிர
தான ஆசாரியரும் வேதபாரகரும் கூடிவந்து தங்க
ள் ஆலோசனைச்சங்கத்தில் அவரைக் கொண்டுவரும்

படிசெய்து அவரை நோக்கி,

நீ கிறிஸ்துவானால் அதை எங்களுக்குச் சொல் 67
லென்றார்கள். அதற்கவர் நான் உங்களுக்குச் சொ
ன்னாலும் என்னை நம்பமாட்டீர்கள்.

நான் உங்களிடத்தில் விசாரித்தாலும் நீங்கள் எ 68
னக்கு மாறுத்தரவு சொல்லவும் என்னை விடுதலையா
க்கவும் மாட்டீர்கள்.

இது முதல் மனிதனுடைய குமாரன் சருவ வல் 69
லமையுள்ள பராபரனுடைய வலதுபாரிசத்தில் உ
ளுக்காருவானென்றார்.

அதற்கு அவர்கள் எல்லாரும் அந்தப்படி நீ பரா 70
பரனுடைய குமாரனோவென்றார்கள்? அவர் சொ
ன்னது, நீங்கள் சொல்லுகிறபடி நானே அவரெ
ன்றார்.

அப்பொழுது அவர்கள் சொன்னது, இனி வேறு 71
சாட்சி நமக்கு வேண்டுவதென்ன! நாந்தாமே இ
வனுடைய வாயினாலே கேட்டோமே என்றார்கள்.

---

## உ௩. அதிகாரம்.

பின்பு அவர்களுடைய கூட்டத்தார் எல்லாரும் 1
எழுந்திருந்து அவரை பிலாத்தென்னுந் துரையினி
டத்துக்குக் கொண்டுபோய்,

இவன் தன்னை இராசாவாகிய கிறிஸ்தென்றுஞ் 2
சனங்கள் இராயருக்கு வரிகொடுக்க வேண்டுவதில்
லை என்றுஞ் சொல்லி அவர்களைக் கலகப்படுத்தக்
கண்டோமென்று அவர்மேற் குற்றஞ்சாற்றத் தொ
டங்கினார்கள்.

அப்பொழுது பிலாத்தென்பவன் அவரை நோக்கி 3
நீ யூதருடைய இராசாவா என்றுகேட்டான். அதற்கு
அவர் நீர்சொல்லுகிறபடியே இருக்கின்றதென்றார்.

பின்பு பிலாத்தென்பவன் பிரதான ஆசாரியரை 4

புஞ் சனக்கூட்டத்தையும் நோக்கி இந்த மனிதனி
டத்திலே ஒரு குற்றத்தையுங் காணேனென்றான்.
5 அதற்கு அவர்கள் சொன்னது, இவன் கலிலேயா
நாட்டைத் தொடங்கி இவ்விடம் வரைக்கும் யூதே
யா நாட்டிலெங்கும் உபதேசம்பண்ணிச் சனங்களை
க் கலகப்படுத்துகிறானென்று அதிக உக்கிரத்தோ
டே சொன்னார்கள்.
6 கலிலேயா நாடென்பதைப் பிலாத்து கேள்விப்
பட்டபொழுது இம்மனிதன் கலிலேயனா என்று
விசாரித்த பின்பு,
7 அவர் ஏரோதே இராசாவின் அதிகாரத்துக்குள்
ளானவரென்று அறிந்து அந்நாட்களில் எருசலேமி
லே வந்திருந்த ஏரோதனிடத்திற்கு அவரை அனு
ப்பினான்.
8 ஏரோதென்பவன் இயேசுவைக் குறித்து மிகுந்த
காரியங்களைக் கேள்விப்பட்டிருந்த படியினாலே அ
நேகநாளாய் அவரைக் காண ஆசையாயிருந்தான்.
ஆதலால் அவன் அவரைக் கண்டபொழுது மிகவு
ஞ் சந்தோஷப்பட்டு, அவர் செய்யும் அற்புதத்தை
ப் பார்க்கலாமென்றெண்ணி,
9 அநேக காரியங்களைக் குறித்து அவரிடத்தில் வி
னாவினான். அவர் அவனுக்கு மறுமொழி ஒன்றுஞ்
சொல்லவில்லை.
10 பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் வந்து நி
ன்று உக்கிரமாய் அவர்மேற் குற்றஞ்சாற்றினார்கள்.
11 அப்பொழுது ஏரோதென்பவனும் அவனுடைய
போர்ச் சேவகரும் அவரை அசட்டைபண்ணிப் பி
ரகாசமுள்ள வஸ்திரத்தை அவருக்கு உடுத்தி இப்ப
டிப் பரிகாசம்பண்ணின பின்பு,
12 அவரைத் திரும்பப் பிலாத்துவினிடத்துக்கு அ
னுப்பினான். அந்த நாளிலே முன்னே ஒருவருக்

கொருவர் பகைஞராயிருந்த பிலாத்தென்பவனும்
ஏரோதென்பவனுஞ் சிநேகிதரானார்கள்.
அப்பொழுது பிலாத்தென்பவன் பிரதான ஆசா 13
ரியரையுந் தலைவரையுஞ் சனங்களையுங் கூடிவர
ச்செய்து அவர்களை நோக்கி,
நீங்கள் இந்த மனிதன் சனங்களைக் கலகப்படுத் 14
துகிறவனென்று சொல்லி இவனை என்னிடத்திற்
கொண்டுவந்தீர்கள். அந்தப்படி நான் உங்களுக்கு
முன்பாக இவனைச் சோதித்தபொழுது நீங்கள் இ
வன்மேற் குற்றஞ் சாற்றின குற்றங்களில் ஒன்றையு
ம் நான் இவனிடத்திற் காணவில்லை.
பின்பு உங்களை ஏரோதினிடத்துக்கு அனுப்பி 15
னேன். அவரும் இவனிற் குற்றங் காணவில்லை.
ஆதலால் இவன் மரணத்துக்கு ஏதுவானதொன் 16
றுஞ் செய்யாதவனாய் இருக்கிறபடியால் நான் இ
வனைத் தண்டித்து விடுதலையாக்குவேனென்றான்.
பண்டிகை தோறும் அவன் அவர்களுக்காக ஒரு 17
வனை விடுதலையாக்க வேண்டியிருந்தபடியால் அப்
படிச் சொன்னான்.
திரளான சனங்கள் எல்லாரும் அதைக் கேட்டு 18
இவனை ஆக்கினைக்குட்படுத்திப் பரபாவை எங்களுக்
காக விடுதலையாக்கவேண்டுமென்று கூக்குரலிட்டா
ர்கள்.
அந்தப் பரபா என்பவன் நகரத்திலே நடந்த ஒ 19
ரு கலகத்துக்காகவுங் கொலை பாதகத்துக்காகவுங்
காவலில் வைக்கப்பட்டிருந்தான்.
அப்பொழுது பிலாத்தென்பவன் இயேசுவைவி 20
டுதலையாக்க மனதாய் மறுபடியும் அவர்களுக்குச்
சொன்னான்.
அதற்கவர்கள் இவனைச் சிலுவைமரத்தில் அறை 21
யவேண்டும் இவனைச் சிலுவை மரத்தில் அறைய

வேண்டுமென்று கூக்குரலிட்டார்கள்.
22 அவன் மூன்றாந்தரஞ் சொன்னது, இவன் என்ன
ப் பொல்லாங்கைச் செய்தான்? இவனிடத்திலே ம
ரணத்துக்கு ஏதுவான குற்றமொன்றையுங் காணே
மே. ஆகையால் நான் இவனைத் தண்டித்து விடுத
லைபண்ணுவேனென்றான்.
23 அப்படி இருந்தும் அவரைச் சிலுவைமரத்தில்
அறையும்படிக்கு அவர்கள் மிகுந்த சத்தத்துட
னே கேட்டுக்கொண்டார்கள். அவர்களும் பிரதா
ன ஆசாரியருமிட்ட கூக்குரல் அதிகப்பட்டது.
24 அப்பொழுது பிலாத்தென்பவன் அவர்களுடை
ய மனுவின்படியாகும்படிக்குத் தீர்மானம்பண்ணி,
25 கலகத்தினிமித்தமுங் கொலை பாதகத்தினிமித்த
முங் காவலில் வைக்கப்பட்டிருந்தவனை அவர்களு
டைய விண்ணப்பத்தின்படி அவர்களுக்காக விடுத
லையாக்கி இயேசுவானவரையே அவர்களுடைய இ
ஷ்டத்துக்கு ஒப்புக் கொடுத்தான்.
26 அந்தப்படி அவர்கள் அவரைக் கொண்டுபோகி
ற பொழுது வயலில் இருந்து வருகிற சிரேனேயூ
ரானாகிய சீமோனென்பவனைப் பிடித்துச் சிலுவை
மரத்தை இயேசுவின் பின் சுமந்து போகும்படி அ
வன் மேலே வைத்தார்கள்.
27 திரளான கூட்டமாகிய சனங்களும் அவருக்காக
த் துக்கமாய்ப் புலம்பி அழுகிற ஸ்திரீகளும் அவரு
க்குப் பின்சென்றார்கள்.
28 அப்பொழுது இயேசுவானவர் அவர்கள் முகமா
யித் திரும்பிச் சொன்னது, எருசலேமின் குமாரத்
திகளே, நீங்கள் எனக்காக அழாமல் உங்களுக்காக
வும் உங்கள் பிள்ளைகளுக்காகவும் அழுதுகொள்ளு
ங்கள்.
29 என்னத்தினாலெனில் மலடிகளும் பிள்ளைப்பெ-

ருந்த கருப்பங்களும் பால்கொடாத முலைகளும் பா
க்கியமுள்ளவைகளென்று சொல்லப்படும் நாட்கள்
வரும்.

அப்பொழுது இவர்கள் மலைகளை நோக்கி எங்க 30
ள்மேல் விழுங்களென்றுங் குன்றுகளைநோக்கி எங்க
ளை மூடிக்கொள்ளுங்களென்றுஞ் சொல்லுவார்கள்.

பசுமையான மரத்துக்கு இப்படிச் செய்தாற் ப 31
ட்டுப்போன மரத்துக்கு மிகவும் அதிகமாய் இப்
படிச் செய்யப்படுமல்லவா வென்றார்.

குற்றவாளிகளாகிய வேறிரண்டுபேரும் அவரோ 32
டே கூட மரணம் அடைவதற்குக் கொண்டுபோக
ப்பட்டார்கள்.

தலையோட்டிடமென்னப்பட்ட இடத்திலே அவ 33
ர்கள் சேர்ந்த பொழுது அங்கே அவரையும் அவ
ருடைய வலதுபக்கத்திலே ஒரு குற்றவாளியையும்
அவருடைய இடதுபக்கத்திலே மற்றக் குற்றவாளி
யையுஞ் சிலுவைமரங்களில் அறைந்தார்கள்.

அப்பொழுது இயேசுவானவர் பிதாவே, இவர்க 34
ள் தங்கள் செய்கையின் தன்மையை அறியாதிருக்கி
றார்கள். ஆதலால் இவர்களுக்கு மன்னித்தருளு
மென்றார். அவருடைய வஸ்திரங்களை அவர்கள்
பங்கிட்டு (அவைகளைக்குறித்து) சீட்டுப்போட்டா
ர்கள்.

ஜனங்கள் நின்று பார்த்துக் கொண்டார்கள். அ 35
வர்களுடனே கூடத் தலைவரும் அவரை இகழ்ந்து
இவன் மற்றவர்களை இரட்சித்தான். இவன் பராப
ரனாலே தெரிந்து கொள்ளப்பட்ட கிறிஸ்துவானா
ல் தன்னைத்தானே இரட்சிக்கலாமே என்றார்கள்.

போர்ச்சேவகரும் அவரை அசட்டைபண்ணி அ 36
வரிடத்திற் சேர்ந்து அவருக்குக் காடியைக் காண்
பித்து,

37 நீ யூதரின் இராசாவானால் உன்னை இரட்சித்துக்
கொள்ளென்றார்கள்.
38 அவருக்கு மேலாக இவன் யூதருடைய இராசா
வென்று கிரேக்கை, லத்தீன், எபிரேயு என்னும்
பாஷைகளால் எழுதப்பட்டிருந்தது.
39 அல்லாமலுந் தூக்கிப்போடப்பட்ட குற்றவாளி
களில் ஒருவன் அவரைத் தூஷணித்து நீ கிறிஸ்து
வானால் உன்னையும் எங்களையும் இரட்சித்துக்கொ
ள்ளென்றான்.
40 அப்பொழுது மற்றவன் அவனுடனே சொன்ன
து, இந்த ஆக்கினைக்குள்ளாயிருக்கிற நீயும் பராபர
னுக்குப் பயப்படாமலா இருக்கிறாய்? நாம் நம்மு
டைய நடக்கைகளுக்குத் தகுதியாக இந்த ஆக்கினை
யை நியாயமாய் அடைகிறோம்.
41 இவர் தகாதவொன்றையும் நடப்பிக்கவில்லையெ
ன்று அவனைக் கடிந்துகொண்டு,
42 பின்பு இயேசுவுடனே சொன்னது, ஆண்டவரே
நீர் உம்முடைய இராச்சியத்திற் சேரும்பொழுது
அடியேனை நினைத்தருளுமென்றான்.
43 அவனுடனே இயேசுவானவர் சொன்னது, இன்
றைக்கு நீ என்னுடனே கூடப் பரதீசில இருப்பா
யென்று மெய்யாய் உனக்குச் சொல்லுகிறேனெ
ன்றார்.
44 பின்பு எறக்குறைய ஆறுமணிநேரமாயிற்று. (அ
துமுதல்) ஒன்பதாம்மணிநேரம் வரைக்கும் அந்த
த் தேசத்தில் எங்கும் அந்தகாரமுண்டாகச் சூரிய
ன் இருள் அடைந்தது.
45 அல்லாமலுந் தேவாலயத்திலுள்ள திரைச்சேலை
நடுவிலே கிழிந்துபோயிற்று.
46 அல்லாமலும் இயேசுவானவர் பிதாவே, உம்மு
டைய கைகளில் என் ஆவியை ஒப்புக்கொடுக்கிறே

னென்று யிருந்த சத்தத்தோடே கூப்பிட்டு அதின் பின்பு சீவனை விட்டார்.

அப்படிச் சம்பவித்தவைகளைப் படைத்தலைவன் கண்டு மெய்யாய் இந்த மனிதன் நீதிமானாயிருந்தா னென்று பராபரனைத் துதிசெய்தான். 47

அல்லாமலும் அந்தச் சங்கதியைப் பார்க்கக் கூ 48
டிவந்திருந்த சனங்கள் எல்லாருஞ் சம்பவித்தவைக ளைப் பார்த்தபொழுது தங்கள் மார்புகளில் அடித் துக்கொண்டு திரும்பினார்கள்.

அன்றியும் அவருக்கு அறிமுகமானவர்களெல்லா 49
ருங் கலிலேயாவில் இருந்து அவருக்குப் பின்சென் று வந்த ஸ்திரிகளுந் தூரத்திலே நின்று அவைகளை ப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

பின்பு யூதருடைய பட்டினமாகிய அரிமத்தியா 50
ஊராருமாய் உத்தமமும் நீதியுமுள்ளவனுமாய்ப் பராபரனுடைய ஆளுகை வரக் காத்திருந்தவனு மாய்,

யூதர்களுடைய ஆலோசனைக்குஞ் செய்கைக்கும் 51
சம்மதியாத ஆலோசனைக்காரனுமாயிருந்த யோ சேப்பென்பவன் பிலாத்துவினிடத்திற் போய்,

இயேசுவின் சரீரத்தைக் கேட்டு, 52

அதை இறக்கி மெல்லிய புடைவையிலே சுற்றிக் 53
கல்மலையில் வெட்டப்பட்டதுமாய் ஒருக்காலும் ஒ ருவனையும் வைக்கப்படாததுமாயிருந்த ஒரு கல்ல றையிலே வைத்தான்.

அந்த நாள் ஆயத்த நாளாயிருந்தது. ஓய்வுநாளு 54
ம் ஆரம்பமாயிற்று.

கலிலேயாவிலிருந்து அவருடனே கூட வந்திரு 55
ந்த ஸ்திரிகள் அவனுக்குப் பின்சென்று கல்லறை யையும் அவருடைய சரீரம் வைக்கப்பட்ட விதத் தையும் பார்த்து,

56 பின்பு திரும்பிப் போய்ச் சுகந்த வருக்கங்களையு
ம் பரிமள தயிலங்களையும் எத்தனம்பண்ணிக் கற்ப
னைப்படியே ஓய்வுநாளில் ஓய்ந்திருந்தார்கள்.

---

## உச. அதிகாரம்.

1 வாரத்தின் முதல் நாள் அதிகாலையிலே அவர்கள்
தாங்கள் எத்தனம்பண்ணின சுகந்தவருக்கங்களை எ
டுத்துக்கொண்டு வேறு சில ஸ்திரிகளுங் கூடக் கல்
லறையினிடத்திற்சென்று,
2 அதின் மேல் இருந்த கல்லு தள்ளப்பட்டிருக்கி
றதைக் கண்டு,
3 உட்பிரவேசித்துக் கர்த்தராகிய இயேசுவின் சரீர
த்தைக் காணாமல்,
4 அதைக் குறித்து மிகுந்த கலக்கம் அடைந்துகொ
ண்டிருக்கையில்,
5 பிரகாசமான வஸ்திரங்களையுடைய இரண்டுபேர்
அவர்களருகே நின்றார்கள்.
6 அப்பொழுது அந்த ஸ்திரிகள் பயந்து தரையை
நோக்கிக் குனிந்து நிற்கையில் அவ்விரண்டுபேரு
ம் அவர்களை நோக்கி உயிரோடிருக்கிறவரை நீங்க
ள் மரித்தோரிடத்தில் என்னத்தினாலே தேடுகிறீர்க
ள்? அவரிங்கே இல்லை. எழுந்து போனார்.
7 முன்னே அவர் கலிலேயா நாட்டில் இருந்த கா
லத்திலே மனிதனுடைய குமாரன் பாவிகளான ம
னிதர் கைகளில் ஒப்புக்கொடுக்கப்படவுஞ் சிலுவை
யில் அறையப்படவும் மூன்றாம் நாளிலே திரும்ப
எழுந்திருக்கவும் வேண்டுமென்று உங்களுடனே
சொன்னதை நினைத்துக்கொள்ளுங்களென்றார்கள்.
8 அப்பொழுது அவர்கள் அவருடைய திரு வசன
ங்களை நினைத்து,
9 கல்லறையை விட்டுத் திரும்பி அந்தச் சங்கதியை
ப் பதினொருவருக்கும் மற்ற எல்லாருக்கும் அறிவி

தீர்கள்?

அதை அப்போஸ்தலருடனே சொன்னவர்கள் 10
மகுதலா ஊராளாகிய மரியாளும் யோவன்னாளும்
யாக்கோபின் தாய் மரியாளும் இவர்களுடனே இ
ருந்த மற்ற ஸ்திரிகளுமே.

அவர்கள் சொன்ன வசனங்களை அப்போஸ்தலர் 11
கள் ஒரு கட்டுக்கதையைப் போல எண்ணி அவர்க
ளுடைய சொல்லை நம்பவில்லை.

ஆனாலும் பேதுரு எழுந்து கல்லறையினிடத்து 12
க்கு ஓடி அதற்குள்ளே பார்க்கக் குனிந்து சேலை
களைத் தனியே வைத்திருக்கக் கண்டு சம்பவித்திருக்
கிறதைக் குறித்துத் தன்னில் ஆச்சரியப்பட்டுக்
கொண்டுபோனான்.

அன்றியும் அன்றைத்தினமே அவர்களில் இரண்டு 13
பேர் எருசலேம்நகரத்துக்கு அறுபது ஸ்தாதி* தூ
ரமான எம்மாவு என்னும் ஊருக்குப் போனார்கள்.

(போகையில) அவர்கள் சம்பவித்திருந்த இக்கா 14
ரியங்கள் யாவையுங் குறித்து ஒருவரோடொருவர்
பேசிக்கொண்டார்கள்.

அப்படி அவர்கள் பேசி விசாரித்துக்கொள்ளு 15
கிற பொழுது இயேசுவானவர் தாமுஞ் சமீபமாகி
அவர்களுடனே கூட நடந்தார்.

அப்படியிருந்தும் அவரை அறியாதபடிக்கு அ 16
வர்களுடைய கண்கள் மறைக்கப்பட்டிருந்தன.

அப்பொழுது அவர் அவர்களை நோக்கி நீங்கள் 17
துக்க முகமுள்ளவர்களாய் வழிநடந்து ஒருவருக்
கொருவர் சொல்லிக்கொள்ளுகிற காரியங்கள் என்
னவென்றார்.

அதற்கு அவர்களில் ஒருவனாகிய கிலேயோப்பா 18

---

* அறுபது ஸ்தாதியென்பது ஏறக்குறைய ஐந்நாழிகை வழிதூரமிருக்கும்.

வென்பவன் சொன்னது, நீ மாத்திரமோ எருசலே
மில் இந்நாட்களிற் சம்பவித்தவைகளை அறியாத அ
ந்நியனாயிருக்கிறாயென்றான்.
19 அவர் எவை என்றார். அதற்கு அவர்கள் சொன்
னது, நாசரேத்தூரானாகிய இயேசுவைக் குறித்த
வைகளே. அவர் பராபரனுக்குஞ் சகல சனங்க
ளுக்கும் முன்பாகச் செய்கையிலும் வசனத்திலும்
வல்லமையுள்ள தீர்க்கதரிசியாய் இருந்தார்.
20 அப்படி இருந்தும் நம்முடைய பிரதான ஆசா
ரியருந் தலைவரும் அவரை மரண ஆக்கினைக்குட்படு
த்திச் சிலுவைமரத்தில் அறைந்தார்கள்.
21 இஸ்ரவேலரை மீட்பவர் அவரே என்று நாங்கள்
நம்பினோம். அவைகள் சம்பவித்தது இன்று மூ
ன்று நாளாகிறதே
22 எங்களிற் சில ஸ்திரிகள் அதிகாலையிலே கல்லறை
யினிடத்திற் போய் அவருடைய சரீரத்தைக் காணா
மல் திரும்பி வந்து,
23 அவர் உயிரோடிருக்கிறாரென்று சொன்ன தேவ
தூதரைத் தரிசித்தோமென்று சொல்லி எங்களைப்
பிரமிக்கப்பண்ணினார்கள்.
24 அப்பொழுது எங்களிற் சிலர் கல்லறையினிடத்
திற் போய் ஸ்திரிகள் சொன்னபடியே கண்டார்க
ள். அவரைக் காணவில்லையென்றார்கள்.
25 அப்பொழுது அவர் அவர்களுடனே சொன்ன
து, தீர்க்கதரிசிகள் சொன்ன யாவையும் விசுவாசிக்
கிறதற்குப் புத்தியில்லாமல் மந்த இருதயமுள்ளவ
ர்களே?
26 கிறிஸ்துவானவர் பாடுபடவும் தமது மகிமைக்கு
ட் பிரவேசிக்கவும் வேண்டியதாயிருக்கிறதில்லையா
வென்று சொல்லி,
27 மோசேயுஞ் சகல தீர்க்கதரிசிகளுந் தொடங்கி

வேதவாக்கியங்கள் எல்லாவற்றிலும் தம்மைக் கு
றித்துச் சொல்லி இருக்கிறவைகளை அவர்களுக்கு வி
வரமாய்க்காண்பித்தார்.
அத்தருணத்திலே தாங்கள் போகிற ஊருக்குச் 28
சமீபமானார்கள். அப்பொழுது அவர் அப்புறம்
போக மனதைக் காண்பித்தார்.
அவர்கள் சொன்னது, சாய்ந்திரமாயிற்றே.பொ 29
ழுது போகின்றதே. ஆகையால் நீர் எங்களிடத்தி
ல் தங்கவேண்டுமென்று மிகவும் வேண்டிக்கொண்
டார்கள். அதன் பின்பு அவர் அவர்களிடத்திலே த
ங்கும்படி பிரவேசித்தார்.
அப்படி அவர்களுடனே பந்தியிருக்கையில் அவ 30
ர் அப்பத்தை எடுத்து ஆசீர்வாதஞ்சொல்லி அதை
ப் பிட்டு அவர்களுககுக் கொடுத்தார்.
அப்பொழுது அவர்களுடைய கண்கள் திறக்கப் 31
பட அவரை அறிந்தார்கள்.
உடனே அவர் அவர்களுக்கு விலகினார். அப் 32
பொழுது அவர்கள் ஒருவரை ஒருவர் நோக்கி வழி
யிலே அவர் நம்முடனே பேசி,
வேதவாக்கியங்களை நமக்கு விளக்கமாய்க் காண் 33
பித்தபொழுது நமக்குள்ள இருதயம் அன்பாய்க்
கொழுந்துவிட்டு வளரவில்லையாவென்று சொல்லி
அந்நேரமே யெழுந்து எருசலேமுக்குத் திரும்பிப்
போய்ப் பதினொருவரும் அவர்களோடிருந்தவர்க
ளும் கூடியிருக்கக்கண்டு,
கர்த்தர் மெய்யாய் எழுந்திருந்து சீமோனுக்குத் 34
தரிசனையானாரென்று அவர்கள் சொல்லக்கேட்டு,
பின்பு வழியிலே நடந்தவைகளையும் அவர் அப்ப 35
த்தைப் பிட்கையில் தாங்கள் அவரை அறிந்துகொ
ண்டதையும் விவரித்துச்சொன்னார்கள்.
அப்படி அவர்கள் பேசிக்கொள்ளுகையில் யேசு 36

வான்வர்தாமே அவர்களுக்குள்ளே நின்று உங்
ளுக்குச் சமாதான சவுக்கியமுண்டாவதாகவென்று
அவர்களுடனே சொன்னார்.
37 அவர்கள் அவரை ஒரு ஆவியென்றெண்ணிக் க
லக்கமும் பயமும் அடைந்தார்கள்.
38 அப்பொழுது அவர் அவர்களை நோக்கி நீங்கள்
என்னத்திற்காகக் கலங்குகிறீர்கள்? என்னத்திற்காக
உங்கள் இருதயங்களிற் சந்தேகங்கள் எழும்புகின்ற
ன!
39 என் கைகளையுங் கால்களையும் பாருங்கள் நான்
தான் இருக்கிறேன். என்னைத்தொட்டுப் பாருங்க
ள். நீங்கள் காண்கிறபடி எனக்குமாமிசமும் எலு
ம்புகளுமுண்டாயிருக்கிறது போல ஒரு ஆவிக்கு
மில்லையே என்று சொல்லி,
40 கைகளையுங் கால்களையும் அவர்களுக்குக் காண்
பித்தார்.
41 அப்படியிருந்துஞ் சந்தோஷத்தினாலே அவர்க
ள் பின்னும் விசுவாசியாமற் பிரமிப்பாய் இருக்கிற
பொழுது போசனத்துக்கு ஏதாகிலும் இங்கே யு
ண்டாவென்றார்.
42 அப்பொழுது அவர்கள் பொரித்த மீன்கண்டத்
தையுந் தேன்கூட்டுத் துணுக்கையையும் அவருக்
குக்கொடுத்தார்கள்.
43 அவைகளை அவர் எடுத்து அவர்களுக்கு முன்
பாகப் பொசித்து,
44 பின்பு அவர்களுடனே சொன்னதாவது, மோ
சேயின் பிரமாணப்புத்தகத்திலேயுந் தீர்க்கதரிசன
ப்புத்தகங்களிலேயுஞ் சங்கீதப் புத்தகத்திலேயும்
என்னைக்குறித்து எழுதியிருக்கிற யாவும் நிறைவே
றவேண்டுமென்று நான் உங்களோடே இருந்த கா
லத்திலே உங்களுடனே சொல்லிக்கொண்ட சங்க

னேன் இவைகளே என்று சொல்லி,
பின்பு வேதவாக்கியங்களை அவர்கள் அறிந்து 45
கொள்ளும்படி அவர்களுடைய மனதுக்குப் புத்தி
கொடுத்து அவர்களுடனே சொன்னதாவது,
இவ்விதமாய் எழுதியிருக்கின்றது. அல்லாமலு 46
ம் அந்தப்படியே கிறிஸ்து பாடுபடவும் மூன்றும்
நாளிலே மரித்தோரிலிருந்தெழுந்திருக்கவும்,
எருசலேந் தொடங்கிச் சகல தேசத்தாருக்கும்
அவருடைய நாமத்தினலே மனந் திரும்புதலையும்
பாவமன்னிப்பையும் பிரசங்கிக்கவும் வேண்டியதா
யிருந்தது.
நீங்களே அவைகளுக்குச் சாட்சிகளாயிருக்கிறீர் 48
கள்.
பின்பு நான் என் பிதா வாக்குத்தத்தம்பண்ணின 49
தை உங்களுக்கு அனுப்புவேன். நீங்கள் உன்னத
த்திலிருந்துவரும் பெலனைப் பெற்றுக்கொள்ளுகி
றவரைக்கும் எருசலேம் நகரத்திலிருங்களென்றார்.
பின்பு அவர் பெத்தானியூர்வரைக்கும் அவர்களை 50
அழைத்துக்கொண்டுபோய்த் தம்முடைய கைகளை
யுயர்த்தி அவர்களை ஆசீர்வதித்தார்,
அவர்களை ஆசீர்வதிக்கையில் அவர் அவர்களை வி 51
ட்டுப் பிரிந்து பரமண்டத்திற்கு எடுத்துக்கொள்
ளப்பட்டார்.
அப்பொழுது அவர்கள் அவரைத் தொழுதுகொ 52
ண்டு மிகுந்த சந்தோஷத்தோடே எருசலேம் நகர
த்துக்குத் திரும்பி,
இடைவிடாமல் தேவாலயத்திலே பராபரனைத் 53
துதித்து வாழ்த்திக்கொண்டிருந்தார்கள்.

முற்றிற்று.